

புது மருமகளே, உனக்கு
முக்கியமா சொல்ல வேண்டியது
இன்னும் ஒரே ஒரு விஷயம் தான் பல
வருஷமா இருக்கறபாத்திரங்கள்,
எப்போதுமே பளிச்சின்னு
இருக்கணும்.



அதுக்கு நான் என்ன
செய்யணும் அத்தை?




நான் சொல்றேம்மா!
ஏ-ஒன் கிளினிங் பவுடர்
போட்டா தான் பாத்திரங்கள்
பளிச்சின்னு இருக்கும். இப்ப
எல்லா வீட்டிலயும்
ஏ-ஒன் கிளினிங் பவுடர்தான்
உபயோக்கிறாங்க.

சடக்குன்னு
அழுக்கும் பிசுக்கும்
ஓடிடும்.

படக்குன்னு
பாத்திரங்கள்
பளிச்சின்னு
மின்னும்




# ஏ-ஒன்

## கிளீனிங் பவுடர்




தயாரிப்பாளர்கள்:

**எஸ்.ஜி.எஸ். கெமிக்கல் இண்டஸ்டிரிஸ்**

பதிவு அலுவலகம்: 168, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, கெல்லீஸ்,
சென்னை - 600 010. போன்: 642 3315 / 642 3325 / 642 4409
பேக்ஸ் : 91 - 044 - 6428586

மண்டல அலுவலகம் : பெங்களூர் போன் : 2204242 / 2204393
கோயமுத்தூர் : போன் : 45404, 46827 திருச்சி : போன் : 23480

SOBHAGYA

# ஒரு கார்ட்டூன்; ஒரு கண்டனம்;


• கே. பாலசந்தர்

அன்புள்ள கி. ராஜேந்திரன் அவர்களுக்கு,

**பா**ரதி ராஜா அவர்கள் பற்றிய உங்களது கார்ட்டூன்தான் இந்தக் கடிதத்திற்கு Provocation.

கிழக்குச் சீமையிலே படம் வெற்றி பெற்றால் ஒரு கார் பரிசளிப்பதாக வெறும் வாய்வார்த்தையாகச் சொல்லியிருந்த நல்லிதயம் கொண்ட அந்த நண்பர், சொன்ன வார்த்தையைச் செயலிலே நிறைவேற்றிக் காட்டியிருக்கும் நேர்மைதான் இந்த அபூர்வமான பரிசளிப்பு விழா. பொதுப் பணத்திலிருந்தோ, மக்கள் வரிப் பணத்திலிருந்தோ அல்லது யாரிடமும் கையேந்தி வசூலிக்கப்பட்டோ இந்தப் பரிசளிப்பு விழா நடத்தப் படவில்லை. அத்தனையும் திரு. பாலசுப்ரமணியம் அவர்களின் சொந்தப் பணம்.

அன்னாருடைய பண்பான செயலை நீங்கள் பாராட்டாவிட்டாலும் பரவாயில்லை. பரிசுக்கு உரியவரான இயக்குநரை கார்ட்டூன் போட்டு இப்படிக் கிண்டல் செய்திருப்பதில் சிறிதும் நியாயமில்லை; நாகரீகம் இல்லை; தர்மமும் இல்லை! ''You too Kalki'' என்றுதான் கேட்கத் தோன்றுகிறது.

கார் பரிசளிப்பு பெற்றுக் கொண்டதனால் பாரதிராஜா அவர்களுக்குச் 'சரிவு' ஏற்பட்டு விடுமோ என்கிற கவலைதான் உங்கள் ஆதங்கத்திற்குக் காரணமாக இருந்தால் அது போலியாகத் தோன்றுகிறது. உங்கள் கார்ட்டூனைப் பார்த்து பாரதிராஜா புண்பட்டிருப்பாரா என்பது எனக்குத் தெரியாது; ஆனால் அந்த பரிசளிப்பு விழாவிலே பங்கு கொண்டவன் என்கிற வகையிலே உங்கள் கார்ட்டூன் எனக்கு மிகுந்த வேதனை அளித்தது! என்னை மன்னியுங்கள்!

அன்பன்,

கே. பாலசந்தர்
2/6/94

# ஒரு விளக்கம்-4ம் பக்கத்தில்


• பாரதிராஜா


• பாலசுப்ரமணியம்

# விகடன்

**ந**டுராத்திரியில் யாரோ வந்து கூப்பிட்டார்கள்.

விட்டோபா போய்ச் சேர்ந்த பொழுது வெராந்தாவில் சின்னக் கூட்டம்.

"ஒரு வாரமா இதே கூத்தாத்தான் இருக்கு.. திடும்னு கண்ணை முழிக்கறாரு... பேச்சு எப்பவோ போயாச்சு. சைகைதான். புரியாட்டா, நம்ம உள்ளங்கையிலே எழுதிக் காமிக்கறார். பணியாரம்.. காடைக்கறி.. இவரு நிலமைக்குத் திங்கத்தான் முடியுமா... நேத்து ராமாவரம் சரசாங்கி சதுரு பாக்கணும்னாரு.. சரசாங்கி செத்து நாலு வருசமாச்சு..."

"நாய்க்குப் பொறந்தவனே..."

ஜமீன்தாரின் இடிக்குரல் நினைவில் இடற, விட்டோபா சிலிர்த்துக் கொண்டார்.

வாயைத் திறந்தால் வசவும், திட்டும், பொசுக்குகிற வார்த்தையும். சார்ந்து இருக்

வெளியே தொடர்ந்து நாய் குரைக்கிற சப்தம்.

"ராவு... நீ என்ன பண்றே.. அந்த மோட்டுக்குப் பக்கம் போய் உக்காந்து உன் திறமையைக் காட்டறே.. ரெண்டு நாய் நிசமாவே அங்கே இருக்கு பாரு.. உன் குரல்லே இன்னும் ஏழெட்டு வரணும். அசல் எது, நகல் எதுன்னு தெரியப் படாது..."

சோறு போடுகிற பிரபு. கண் காட்டினால் குரைக்க வேண்டியதுதான்..

குப்பை மேட்டு சொறி நாய்கள் நடுங்கி ஓட, விட்டோபா ஓலமிட்ட அந்த ராத்திரி..

"**உ**ள்ளே போங்க.." வழி விட்டார்கள்.

நைந்த துணியாகக் கட்டிலில் மாரப்ப



கிறவர்கள் எல்லோரும் இருக்கச் சொன்னால் நிற்க வேண்டும். நிற்கச் சொன்னால் முழங்காலில் நிற்க வேண்டும்..

இந்த இடம்தான்... பத்து வருஷம் முன்னால் இதே போல ஒரு ராத்திரி.. "என்னய்யா பொணம் மாதிரி வரே?"

நல்ல தூக்கத்திலிருந்து எழுப்பி, யமகிங்கரர்கள் போல அழைத்து வந்தவர்கள் கை கட்டி நிற்க, விருந்தாட வந்தவர்களோடு மாரப்ப பூபதி.

"மாரப்பா.. சரசாங்கியை வரச் சொல்லுவேன்னு பாத்தா, வத்தலும் தொத்தலுமா இந்த ஐயரைக் கொண்டாந்து..." குப்பியை நிறைத்தபடி ஒரு மீசைக்காரர்.

"ஐயரில்லேடா கபோதி.. ராவு.. மராட்டி வமிசம்.. சிவாசியோட வந்தவங்களாம்.. இந்த தேவாங்குக்குள்ளே என்ன ஒரு திறமை தெரியுமா? குரல் மாத்திப் பேசறதுல ஜித்தன்!"

**இரா. முருகன்**

பூபதி. கையும் காலும் இழுத்து முகம் கோணி இருக்க, கண்ணில் கொஞ்சம் வெளிச்சம்.

"எண்ணெய் குடிச்ச மூஞ்சூறு போல நிக்கறியே... ஆரம்பி..."

விட்டோபா ஓரமாகப் போய் நின்றார். சட்டென்று உடம்பு விறைத்தது. நெஞ்சு விரிந்து தலைநிமிர்ந்தது.

"நல்லா இருங்க.. எல்லோரும் நல்லா இருங்க. மனுசனா இருங்க.. நல்ல மனசோட.... நல்ல வாக்கோட.... நல்ல செய்கையோட.... ராவு... கோயில்லே சாமி பொறப்பாட்டுக்கு மல்லாரி வாசிக்கறதைப் பண்ணுமய்யா.. மேன தாளத்தோட...."

விட்டோபா குரலில் கம்பீரமாக ஏறி ஒலிக்கிற மாரப்ப பூபதியின் வெங்கலக் குரல். நாயனச் சத்தம் இழைந்து பரவ, அவர் கண்கள் நிறைந்தபடியே இருந்தன.

# இந்தியா டுடே

"தயவு பண்ணி அந்த சாவித்திரி அம்மாளை உடனே ஊருக்கு பேக் பண்ணும்மா..." என்று தன் மம்மியிடம் முகம் சுளிக்க ஆர்டர் போட்டாள் மஞ்சு.

மஞ்சுவுக்கு கிராமத்து சிநேகிதமெல்லாம் பிடிக்காது. இப்போது அப்பாவின் எக்ஸிக்யூட்டிவ் கௌரவத்துக்கு ஐந்து நட்சத்திர ஹோட்டல்களும் டிஸ்கோ கிளப்புகளும்தான் சிநேகிதம்.

"இல்லை மஞ்சு.. வந்து.. அவங்க சின்ன வயசில் உங்கப்பா கஷ்டப்பட்ட போது..."

"தெரியும்... உதவி பண்ணினாங்க. சங்கிலியை வித்துக் கடன் குடுத்தாங்க.. அதை வெச்சுத்தான் அப்பா மெட்ராசுக்கு ரயில் ஏறினார். இதைத் தானே சொல்லப் போறே.. நூத்தி இருவது வாட்டி சொல்லிட்டே..."

"தெரியுதில்லை... அப்பவும் உன் மனசுக்குள் விஷயம் ஏறலையே!" அம்மாவின் குரல் குறைப்பட்டுக் கொண்டது.

டெலிபோன் அடிக்கவே அத்துடன் பேச்சு நின்றது.

இருந்தாலும் கிராமத்தைப் பற்றிய வெறுப்பு மட்டும் அவள் மனசை விட்டு என்றைக்கும் போகாது. அவள் கனவெல்லாம் ஆகாசக் கனவுகள். அமெரிக்கக் கனவுகள். என்ன கிராமம்? சே.



வேதா கோபாலன்

ஹாய்... நான்தான் சுஷ்மா பேசறேன். இன்னிக்கு விநிதா பார்ட்டி குடுக்கறா, நினைவிருக்கில்லே... வந்துடுயா..."

"யெஸ்... அஃப்கோர்ஸ்.." மீண்டும் பார்ட்டி நடக்கும் ஹோட்டலின் பெயரை ஒருமுறை சொல்லி உறுதிப்படுத்திக் கொண்டாள். "ஈவ்னிங் ஸிக்ஸ் தானே?"

"ஆமாம்... வந்துடுப்பா... அந்த ஹோட்டலில் புதுசாய் ஒரு ஃப்ளோர் கட்டியிருக்காங்க... அதில்தான்."

"கட்டினது தெரியும். ஆனால் அந்த ஃப்ளோருக்குத்தான் இன்னும் போனதில்லை."

"ஐயோ... என்ன பிரமாதமான இன்டீரியர் டெகரேஷன் தெரியுமா? அற்புதம்! சினிமா ஆர்ட் டைரக்டரை வெச்சு அருமையாய்ப் பண்ணியிருக்காங்க."

அவளுக்கு ஆர்வம் தலைக்கு மேல் ஏறியது. எப்படி இருக்கிறது அந்த ஓட்டல் தளம் என்று இப்போதே பார்த்து விட வேண்டும் போல் இருந்தது.

மாலை ஆறு மணிக்கு அந்த ஆசை நிறைவேறியது.

"வாவ் பியூட்டிஃபுல்!" சிநேகிதிகள் எல்லோரும் வாய் பிளந்தார்கள்.

"என்ன டெகரேஷன்யா..."

மஞ்சுவும் வியந்தாள்.

"என்ன இமாஜினேஷன்... எப்படி அந்த ஆளுங்களுக்கு இது தோணியிருக்கும்...?"

"இப்போ இந்த ஃப்ளோரை என்ஜாய் பண்றதுக்காகவே நிறைய பேர் வந்து குவியறாங்களாம்."

மஞ்சுவும் அவளின் சிநேகிதிகளும் நேராய்ப் போய் மேனேஜரைப் பார்த்து ஸ்பெஷலாய்ப் பாராட்டினர்.

"பிரமாதமாய் இருந்துச்சு சார். அந்த ஃப்ளோரில் அப்படியே ஒரு கிராமத்தையே கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்திட்டீங்க. மாட்டு வண்டி, வைக்கோல் போர், லாந்தர் விளக்குன்னு அப்படியே தத்ரூபமாய்ச் செய்திருக்கீங்க" - மஞ்சு மனம் நிறையப் பாராட்டினாள்.

அந்தக் கிராமத்து டெகரேஷனுக்காகவே ஸ்பெஷலாய் பத்தாயிரம் ரூபாய் பில் கொடுத்து விட்டு வந்தாள் பார்ட்டி கொடுத்த சிநேகிதி!

# இதயம் பேசுகிறது

**சுபா**

"அந்தப் பையனுக்கு நாம ஏதாச்சும் பண்ணணுங்க" என்றாள் நாகலட்சுமி.

"நானும் ஆனந்தனைப் பத்தித்தான் நெனச்சிக்கிட்டிருந்தேன்'' என்றான் சுவாமிநாதன்.

"எட்டு வயசு கூட ஆகலை. ஆனா பம்பரம் மாதிரி சுத்திச் சுத்தி வேலை செய்றான்."

"மரியாதை தெரிஞ்ச பய."

"நம்ம லேகா ஒரு கிண்ணம் சோறு சாப்பிட என்னை எப்படி பாடாப்படுத்தும்? அவன் மடில உக்காந்து அண்ணா, அண்ணான்னு குருவி மாதிரி வாயைப் பொளக்குது!"

"சின்னது கூட அவன்கிட்ட ஒட்டிரிச்சி."

இருவரும் மாறி மாறி ஆனந்தனையே பேசினார்கள். விடுமுறைக்காக நான்கு நாட்கள் ஊட்டியில், கம்பெனி கெஸ்ட் ஹவுஸில் தங்கியிருந்ததில், வாட்ச்மேன் லோகுவை விட அவனது ஏழு வயது மகன் ஆனந்தன் நெருக்கமாகி விட்டான்.

கார் துடைப்பது, வெந்நீர் போடுவது, சிகரெட் வாங்கி வருவது, சாதம் ஊட்டுவது, டிரெஸ் பண்ணி விடுவது, பிக்னிக் சுமைகளைச் சிரித்துக் கொண்டே சுமந்து வருவது… ஆனந்தன், ஆனந்தன், ஆனந்தன்.

"லோகுவுக்கு ஆறு பொம்பளப் பசங்களாம். இவன் ஏழாவது. காலைல பேப்பரைத் தலைகீழா வெச்சிக்கிட்டு வேடிக்கை பார்த்துக்கிட்டிருந்தான். என்னடான்னு கேட்டா, எழுதப் படிக்கத் தெரியாதாம். அப்பா ஸ்கூலுக்கு அனுப்பலையாம்…"

"………"

"ஆனந்தனை நம்ம கூட கூட்டிக்கிட்டுப் போய்ட்டா என்னங்க? காலேஜ் வரைக்கும் அவன் படிப்பு, டிரெஸ், போக்குவரத்து எல்லாத்தையும் நாம ஏத்துக்கிட்டா என்ன? அவனும் கொழந்தைங்க கிட்ட உசிரா இருக்கான்!"

"சொன்னா நம்ப மாட்டே லட்சுமி. நானும் இதேதான் யோசிச்சிட்டிருந்தேன். விடியட்டும். காலைல லோகு வந்தவுடனே சொல்லிடுவோம். ஆனந்தனுக்கு நாம ஏதாச்சும் செஞ்சாகணும்" என்றான் சுவாமிநாதன் உணர்ச்சியுடன்.

"லோகு, உம் பையனை எங்களுக்கு ரொம்பப் புடிச்சிப் போச்சு. அவனுக்கு ஏதாச்சும் செய்யணும். அவனைக் கூப்பிடேன். புறப்படணும். நேரமாயிரிச்சி."



ஆனந்தன் மூச்சிரைக்க வந்து சேர்ந்தான். சுவாமிநாதன் அவன் தோளை அணைத்தான். தன் பாக்கெட்டிலிருந்து ஐம்பது ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவன் கையில் திணித்தான்.

"லோகு, ஆனந்தனுக்கு நல்லதா ஒரு சட்டை வாங்கிக் கொடு. வீண் செலவு பண்ணிடாதே!"

ஆனந்தன் கைகளைப் பின்னுக் கிழுத்துக் கொள்ள, "ஐயா, கொடுக்கறாங்க இல்ல? வாங்கிக்க."

"மறுபடி எப்ப சார் வருவீங்க?" என்றான் ஆனந்தன் ஈரக் கண்களுடன்.

"அடுத்த வருஷம். அதுக்குள்ள நீ வளர்ந்திருப்பே. எங்களையெல்லாம் மறந்திட மாட்டியே?" என்று கேட்டான் சுவாமிநாதன் உதட்டில் புன்னகையுடன்.

இதயம் அன்பைத்தான் பேசுகிறது. ஆனால் புத்தி? அதற்கு நிறைய கூட்டல் கழித்தல் கணக்கெல்லாம் போடத் தெரிந்திருக்கிறது.

# சாவி

முகுந்தன்

“நேற்று ராத்திரி நம்ம அழகர்சாமி மேலே சாத்தியிருந்த நகைகள் களவு போயிடுச்சு... திருடனைப் பிடிக்க முயன்றதாகவும் அவன் தப்பி ஓடிட்டதாகவும் சாவி பட்டாச்சாரியார் சொல்றார்.”

தர்மகர்த்தா படபடப்பாகப் பேசினார்.

“நான் இதை நம்பமாட்டேன்!” என்றார் பள்ளித் தலைமையாசிரியர். “எனக்கென்னவோ சாவி பட்டர் மேலேயேதான் சந்தேகம்...”

ஊர் திகைத்தது. சாவி பட்டர் மௌனம் சாதித்தார்.

“எதை வச்சு சந்தேகப்படறீங்க?”



“வெளியூரிலே சொல்லி நம்ம கோயில் சாவிகளைப் போலவே ஒரு செட் சாவி தயாரிச்சு வாங்கி வச்சிருக்கார் அவர்... உண்டா, இல்லையான்னு கேளுங்க...”

கூட்டம் சாவி பட்டரைப் பார்த்தது. கண்களில் வியப்பு, தவிப்பு, அதிர்ச்சி.

அழகர்சாமி திருக் கோவிலின் பரம்பரை அர்ச்சகர், சாவி பட்டாச்சாரியார். பல ஆண்டுகளாக நீண்ட, கனமான கோவில் சாவிகளைத் தோளில் போட்டு, தழும்பேறியவர்.

பெரிய குடும்பம். மூன்று பெண், மூன்று பையன் தவிர ஒரு நோயாளி தாயார்... வாய்க்கும் வயிற்றுக்கும் மட்டுமான வருவாய்.

எனினும் பொய், சூது அறியாத ஆத்மா. அவரா? அவரா? அவரா?

“என்ன பட்டரே, பேசாம இருக்கீர். கோவில் சாவி மாதிரியே டூப்ளிகேட் சாவி செய்து நீங்கள் வைத்திருப்பது நிஜமா?”

பட்டர் ‘ஆமாம்’ என்று தலையசைத்தார். கூட்டம் அதிர்ந்தது.

“சே! சாவிபட்டரா இப்படி?” முணு முணுப்புகள் எழுந்தன.

“அது எதுக்குன்னு நான் சொல்றேனுங்க!”

-புதுக்குரல் கேட்டது வாசற் பக்கமிருந்து! ஒரு முறுக்கு மீசைக்காரன்.

“ஐயாமாருங்களே! பட்டரைச் சந்தேகப்படாதீங்க. அவர் உத்தமர். கோவில் பணிதான் வாழ்க்கையில தனக்குக் கிடைத்த ஒரே அதிர்ஷ்டம்னு நினைக்கிறவர். தான் செத்துப் போய் உடம்பைக் கட்டையிலே கிடத்துகிற வரைக்கும் இதுநாள் வரை தன் தோளில் தொங்கிய சாவி, தோளிலேயே கிடக்கணும்னு ஆசை அவருக்கு. ஆனா அடுத்த மாசம் அவர் ரிடையர் ஆறார். கோயில் சாவியைக் அப்புறம் கொடுக்க மாட்டாங்களே.. அதனாலேதான் என்னை மறுசாவி தயாரிச்சுக் கொடுக்கச் சொன்னாருங்க. அனாவசியமா அவர் நேர்மையைச் சந்தேகப்படாதீங்க”

ஊரார் வெட்கித் தலை குனிந்தனர்.



சூர்யா

"இது வேண்டாம். வேற புடைவை கட்டிக்கோ..."

"ஏன்?... ஏன்?..."

"எனக்குப் பிடிக்கலை."

"எனக்குப் பிடிச்சிருக்கே...!"

"சகிக்கலை! பஞ்சு மிட்டாயை இழுத்து வச்சு இஸ்திரி பண்ண மாதிரி... என்ன கலர் இது!"

எனக்குச் சுத்தமாய்ப் பிடிக்காத நிறம். அது தெரிந்தும் வேண்டுமென்றே வாங்கியிருக்கிறான். சுறுசுறுவென்று கோபம் வந்தது. என் கோபம் ஏற ஏற அவள் கண்களில் குறும்பு நேர் விகிதாசாரத்தில் வளர்ச்சியுற்றது.

முந்தானையைத் தோளில் அலட்சியமாய் விசிறி விட்டு, மாடல் போல் நடந்து, சுழன்று மிக அருகில் வந்து நின்றாள்.

ஒருகணம், ஒரே கணம்... துச்சாதன மூர்க்கத்துடன் செயல்பட்டு விட்டேன்.

முந்தைய வினாடி வரை குறும்பு கொப்பளித்த அவள் கண்களில் அனல் பறந்தது.

"எனக்குப் பிடிக்காதுன்னு தெரிஞ்சும் வேணும்னே வாங்கியிருக்கே?"

"உனக்குப் பிடிக்கலைன்னா நான் உடுத்தக் கூடாதா? இது அநியாயம்! ஆக்கிரமிப்பு! ஆணாதிக்கம். தாலி கட்டிட்டா உடைமையாயிடுவோமா...?"

ஒன்பது மாசக் காதலில் சுமியின் இந்த நெருப்பு குணத்தை நான் உணராமலில்லை; ரசிக்காமலில்லை... ஆனாலும் இப்போது அது சுட்டது.

வார்த்தைக் கங்குகளை அள்ளி வீசிக் கொண்டோம். முடிவில் அன்று மாலைக்கான சினிமா டிக்கெட்டுகளைக் கிழித்துப் போட்டேன்.

ஒரு வாரம் மௌனத்தில் கழிந்தது. நசுங்கிய தம்ளர்களும் தூசு தட்டப்படாத வீடும் மடித்து வைக்காத பேப்பரும் எங்களின் மௌன யுத்தத்தின் அடையாளங்கள்.

ஏழாம் நாள் மாலை மன மூலையில் மூண்ட வருத்தம், மறுநாள் காலைக்குள் 'மடையா மடையா' என்று மண்டையில் அடித்தது.

பிராயச்சித்தமாக இன்னொரு 'பிங்க்' புடைவை வாங்கிக் கொண்டு வீட்டில் நுழைந்த போது...

யுத்த அடையாளங்கள் காணாமல் போயிருந்தன.

சுமி சிரித்தாள்.

"இங்க வா...!"

பின் அறைக்கு இழுத்துப் போனாள்.

அங்கே... யுத்தத்துக்குக் காரணமான ரோஸ் புடைவை ஜன்னலில் வண்ணத் திரையாக...

"ஐ'ம் சாரி சுமி..." கரகரத்தது என் குரல்.

கையிலிருந்த புடைவை பார்ஸலைப் பிடுங்கிப் பார்த்து விட்டுச் சொன்னாள் :

"பஞ்சு மிட்டாயை இழுத்து வச்சு இஸ்திரி பண்ண மாதிரி இருக்கு...!"

சிரித்தபடி ஜன்னல் திரையை இழுத்து மூடினேன்.

# வண்ணத் திரை

# குங்குமம்

**பத்மா ரவிசங்கர்**

“நல்ல சேதி கொண்டு வந்திருக்கேன்!” என்றவாறு உள்ளே வந்தார் தரகர்.

சாம்பசிவம் அருகில் அமர்ந்திருந்த ஷோபா எழுந்து நின்று கொண்டாள்.

“போன வாரம் நம்ம ஷோபாவைப் பார்த்த எஞ்சினியர் வரன்காரங்க சம்மதம் தெரிவிச்சுட்டாங்க!”

“எங்க ஷோபாக்குட்டியோட அதிர்ஷ்டம்!” என்று மகிழ்ந்த சாம்பசிவம், “மீனாட்சி!” என்று மனைவிக்குக் குரல் கொடுத்தார்.

ஸ்வீட் தட்டுடன் வந்த மீனாட்சி, “கடவுள் புண்ணியத்துல நல்லபடியாயிருச்சு.”

ஸ்வீட்டை விண்ட தரகர், “உண்மையிலேயே கடவுள் புண்ணியந்தான்!” என்றார்.

“என்ன சொல்றீங்க?”

“நம்ம பொண்ணைப் பார்த்த பிறகு அவங்க இன்னொரு வரனும் பார்த்திருக்காங்க போல. அந்தப் பெண்ணும் நம்ம ஷோபா போலவே அழகு; படிப்பு; ஒரே பொண்ணு. உங்க அளவுதான் அந்தஸ்தும். யாரைத் தேர்ந்தெடுக்கறதுன்னு குழப்பமாயிருச்சாம். சாமி படம் முன்னால ரெண்டு பொட்டலம் கட்டிப் போட்டுப் பார்க்க முடிவு பண்ணாங்க. ‘பூ’ வந்தா அந்தப் பொண்ணு. ‘குங்குமம்’ வந்தா ஷோபா.”

மீனாட்சி பெருமிதம் பொங்க, “குங்குமம் வந்ததாக்கும்!”

“ஆமாங்க!”

“கடவுளே உத்தரவு கொடுத்துட்டார்! நீ நல்லா இருப்பே ஷோபா கண்ணு!”

ஷோபா முகம் இறுக, “எனக்கு இந்த வரன் வேண்டாம்பா!” என்றாள்.

“என்னது! உனக்கு என்ன பைத்தியமா? இஞ்சினீயர் பையன். கை நிறைய சம்பளம். இந்தக் காலத்துல கடவுள்கிட்ட உத்தரவு கேக்கறான் பாரு!”

“நிறுத்துங்கப்பா! ஒரு பெண்ணைப் பார்த்துப் பிடிச்சுப் போய் எல்லா விதத்திலும் திருப்தியானதுக்கப்புறம் - நப்பாசைப்பட்டு இன்னொரு வரன் பார்த்த வியாபாரி எனக்கு வேணாம்பா!”



MAXIMA – A UNIQUE GROUP OF COMPANIES



MAXIMA

MAXIMA CREDIT LINKS (P) LIMITED
MAXIMA CHITS MADRAS (P) LIMITED
MAXIMA INVESTMENT & FINANCE COMPANY
*(INCORPORATED UNDER COMPANIES ACT, 1956)*

OFFERS

25%p.a.

ON DEPOSITS THROUGH POST-DATED CHEQUES

| | | |
|---|---|---|
| FIXED DEPOSIT | EARN INTEREST MONTHLY, QUARTERLY, HALF-YEARLY | Minimum Amount Rs. 1000/- |
| CUMULATIVE DEPOSIT | INTEREST YIELD AS HIGH AS 30.12% PER ANNUM | Rs. 1000/- |
| GOLDEN DEPOSIT | DOUBLING IN 3 YEARS | Rs. 2750/- |
| DIAMOND DEPOSIT | BE A 'LAKHPATI' IN 20 YEARS | Rs. 2550/- |

| PERIOD | INTEREST |
|---|---|
| 12 Months & 1 Day | 25.00% |
| 24 Months | 26.05% |
| 36 Months | 27.27% |
| 48 Months | 28.63% |
| 60 Months | 30.12% |

MAXIMA INVESTMENT & FINANCE COMPANY

Regd Office: 1, Vedantha Desikar Street,
R.K. Mutt Road, Near Luz Bazzar, Mylapore, Madras-600 004.
Phone : 4941849 Fax: 044-8276722. Grams: MAXFIN

MAXIMA – MAXIMUM DEPENDABILITY

# வை.கோ. கூடாரம் கலைகிறது?


• தாணு

"வை.கோ. கூடாரம் கலைகிறது" என்று சொன்னால் சில தீவிர வை.கோ. ஆதரவாளர்கள் 'கல்கி, தி.மு. கழகப் பத்திரிகையாகிவிட்டது' என்று பாயக்கூடும். ஆயினும் சில உண்மைகளை மறைக்க முடியாது. கூடாரம் கலைகிறதோ இல்லையோ நிறையவே பொத்தல் விழுந்திருக்கிறது. அது மேலும் கிழியப் போகிறதா அல்லது, வை.கோ. கோணி ஊசியுடன் வந்து தையல் போடுவாரா என்பதைத்தான் பார்க்கவேண்டும்.

மயிலை இடைத் தேர்தலில் நின்று தோற்ற தாணுவுக்கு எதிராக ஒரு பெரும் படையே கட்சிக்குள் திரண்டிருக்கிறது. "பெரியார் படத்தை வைத்து வோட்டு கேட்க வேண்டிய கட்சியில், சமஸ்கிருத ஸ்லோகங்கள் பாடி வோட்டு கேட்டதும், எம்ஜிஆர். படத்தை வைத்து வோட்டு கேட்டதும் கண்டிக்கத் தக்கது. மேலும் கட்சி அலுவலகத்துக்குத் தம் வீட்டைக் கொடுத்த ஒரே காரணத்துக்காக வை.கோ-விடம் அதிக சலுகை எடுத்துக் கொள்கிறார். தவிர ஸீனியர் களை அவர் மதிப்பதில்லை. 'அவன்...இவன்' என்று மரியாதைக் குறைவாகப் பேசுகிறார்..." இப்படியாக நீளமான குற்றச்சாட்டுப் பட்டியல்.

ஆனால் தாணு, இதெல்லாம் சுத்த அபத்தம் என்கிறார். "எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. அதனால் பிரசாரத் தொடக்கத்தில் சில பக்தி சுலோகங்கள் சொன்னேன். இதற்காகப் பெரியார் பக்தர்கள் கோபப்பட வேண்டியதில்லை. கடவுள் மறுப்புக் கொள்கை தவிர, பெரியாரின் பிற பகுத்தறிவுக் கொள்கைகளை ஏற்பவன் நான். இதில் மறைக்க ஒன்றும் இல்லை.

"மேலும் வை.கோ.விடம் அதிக செல்வாக்கு எடுத்துக் கொள்வதாகச் சொல்லப்படுவதும் பொய். வை.கோ., கட்சியின் எல்லா நிர்வாகிகளையும் கலந்துதான் நடவடிக்கை எடுக்கிறார். சமயங்களில் அடிமட்டத் தொண்டர்களையும் அவர் கருத்துக் கேட்கத் தயங்குவதில்லை.

"சீனியர் பிரமுகர்களை நான் தரக் குறைவாகப் பேசுவதாகச் சொல்வதெல்லாம் தவறான தகவல்" என்று ஒட்டு மொத்தமாக மறுக்கிறார் தாணு.

இது இப்படி இருக்க, "கே.பி.கந்தசாமி தமக்குப் பத்திரிகை பலம் இருப்பதாலேயே வை.கோ.வைத் தம்மிஷ்டத்துக்கு ஆட்டிப் படைக்கிறார்" என்று ஒரு கசமுசா. இது பற்றி மிகக் கோபமாக இருப்பவர் எல்.கணேசன். தேர்தலில் வெற்றி பெற கே.பி.கே., காஞ்சி சங்கராச்சாரியாரிடம் சென்று ஆசி பெற்றதை கட்சிக்காரர்கள் பலர் மிகக் கடுமையாக விமர்சிக்கிறார்கள்.

தவிர, தென் மாவட்டங்களில் நடந்து வரும் பரவலான கோஷ்டி மோதல். மதுரையில் பொன்.முத்துராமலிங்கத்துக்கும் செ.ராமச்சந்திரனுக்கும் மோதல். நெல்லையில் லட்சுமணனுக்கும் ஆலங்குளம் முருகையாவுக்கும் லடாய். தலைமைக் கழகத்தில் பொறுப்பாளர்களாக இருக்கும் மாஜி எம்.எல்.ஏ.குருநாதனுக்கும் திருச்சி கண்ணையாவுக்கும் குடுமிப்பிடி சண்டை... எட்ஸட்ரா, எட்ஸட்ரா.

"கட்சி தொடங்கிய சில மாதங்களுக்குள்ளேயே இப்படி விவகாரமயமாகப் போனால் வளர்ச்சி எப்படி சாத்தியம்?" என்று கட்சியின் முக்கியப் பிரமுகர்கள் பலர் முணு முணுக்கிறார்கள். 'வை.கோ.வுக்கு ஆதரவாகத் தி.மு.க.வில் குரல் கொடுத்து ஏன்தான் வெளியே வந்தோமோ?' என்று வருத்தப்பட ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த நிலையில்தான் ஜூலையில், கலைஞர் மாநாடு கூட்டுகிறார். என்ன நடக்கும் என்பது வை.கோ.வின் தையல் கலைத் திறனைப் பொறுத்ததே.

- ஆர்.எஸ்.


• வை.கோ.

வட்ட மேஜை

# தேவுடு, மீரு செப்பண்டி!

♦ தலையங்கத்தில் ''இனியுடனே மனந்திறந்து பாராட்டியுள்ளார் நமது ராவை'' என்ற செய்தியைப் படித்தவுடன், உலக அரங்கில் நமது குரல் உரக்க ஒலித்தது கண்டு பூரித்தேன். "காஷ்மீர் பிரச்னையை உலகப் பிரச்னை ஆக்குவேன்" என ஊளையிடும் பாகிஸ்தானுக்கு மரண அடி.
குடந்தை, வ.குலோத்துங்கன்.

♦ ராவ், அமெரிக்கா செல்வதற்கு முன்பே அமெரிக்க நிர்ப்பந்தத்திற்கு பணியலாகாது என்று எதிர்க் கட்சிகள் மொத்தமும் கடும் எதிர்ப்பைக் காட்டி வந்தன. பாராளுமன்றத்தில் ராவுக்கு இருப்பதோ நூலிழைப் பெரும்பான்மை. எனவே, பாராட்டுக்குரியவர்கள் ஒருங்கிணைந்து கண்டனக் குரல் எழுப்பிப் போராடிய எதிர்க் கட்சிகள்தான்!
சென்னை - 14, வஜ்ரவேலு.

♦ ராவின் அமெரிக்கப் பயணத்தில் மிகவும் ஆவலோடு எதிர்பார்க்கப்பட்ட அறிவியல்-தொழில் நுணுக்க ஒத்துழைப்பு கைகூடாமல் போனது வருத்தமளிக்கிறது. உப்புச் சப்பில்லாத பயணம் தான் ராவின் அமெரிக்கப் பயணம்.
மொரட்டுப்பாளையம், க.நா.இராஜேஸ்வரன்.

♦ சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர் வருகின்றதோ இல்லையோ, ஒரு சராசரி சென்னை வாசியாய் இருந்து விஜயபாஸ்கர ரெட்டியைப் பேட்டி கண்டிருப்பது சென்னை நகர மக்களின் வயிற்றில் பாலை... sorry, தண்ணீரை வார்த்திருக்கும்.
திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

♦ அட்டையில் என்.டி.ஆர் தம்பதிகளைப் பார்த்ததும், மனத் திரையில் முதல் மரியாதை சிவாஜியும், ராதாவும்(!) ஒரு நிமிடம் தோன்றிச் சென்றார்கள்.
சேலம்-9, மு.இரவிச்சந்திரன்.

♦ லட்சுமி பார்வதி சமேத ராமராவ் காருவின் பேட்டியில் எதிர்பார்த்த அளவு அரசியல் நெடி, காரம், மணம்...ஏமி லேது! 'ஹனிமூன்' மயக்கம் இன்னும் தீரல்லையா? தேவுடு, மீரு செப்பண்டி!
ஸ்ரீரங்கம், ஆர்.கோபாலன்.

♦ அரசியல் வாரிசாக லட்சுமி பார்வதியை உருவாக்குவதாகச் சொல்கிறார்களே என்ற கேள்விக்கு என்.டி.ஆர் அளித்துள்ள பதில் நினைவில் நிற்கும்.
சென்னை-54, க.நடராசன்.

♦ தமிழ் நாடக உலகம் நாளுக்கு நாள் தரங்கெட்டும், அழிந்து கொண்டும் வரும் வேளையில் புத்துயிரும், புதுத்தெம்பும் ஊட்டும் வகையில் மீண்டும் புராண, வரலாற்று நாடகங்களை நடத்த முன் வந்த நடிகர் மனோகரை எப்படிப் பாராட்டினாலும் தகும்.
லால்குடி, எம்.இராஜேந்திரன்.

♦ பிப்ரவரி முப்பதில் செலவு காட்டி, பணம் பெற்ற கேரள எம்.எல்.ஏ. தேர்தலில் ஜெயிச்சது நல்ல ஓட்டிலா, கள்ள ஓட்டிலா? யோசிக்க வேண்டிய விஷயம்.
மதுரை-16, எல்.எம்.மங்கை.

♦ எப்படி...எப்படி? திருமண வயது எழுபதுக்கு மேலா...? இந்த குறும்பும், லொள்ளும் போகவே போகாதய்யா உமக்கு.
குணசீலம், ஆர்.சங்கர நாராயணன்.

♦ உதாதிபன் எழுதிய "வல்லமை தாராயோ" சிறுகதை அருமை. ஒவ்வொரு மனிதனுக்கும் தன்மான உணர்ச்சி வேண்டும் என்கிற கருத்தை எளிய முறையில் புரிய வைத்துள்ளார்.
பாண்டிச்சேரி-3, வசந்தராஜசெல்வன்.

♦ ஏனுங்க, 'இந்து' மாதிரி படம் வந்தாலும் காய்ச்சுறீங்க. 'டுயட்' மாதிரி டீசன்ட்டான படம் வந்தாலும் காய்ச்சுறீங்க..! உண்மையிலேயே உங்க டேஸ்டுக்கு படம் எடுத்தா நீங்களும் நானும் தான் தியேட்டரில் படம் பார்க்கணும்!
சேலம்-1, கே.ராஜபாலு.

♦ நேருஜியின் பிறந்த நாளையொட்டி அவருக்குப் பரிசளிக்கப்பட்ட தொகுப்பு நூலில், "கல்கி"யின் "மோகினித் தீவு" குறுநாவலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர் அ.சீனிவாசராகவன்; தராக குறிப்பிட்டுள்ளது போல் கே.சுவாமிநாதன் அல்ல.
சென்னை-17, சுந்தா.

# Kalki Shopping Page


திருமண
சீர்வரிசை
எவர்சில்வர்
பித்தளை
பாத்திர வகைகளுக்கு
கைராசியான ஸ்தாபனம்

## கமலா ஸ்டோர்ஸ்

காந்திபுரம்,
கோயமுத்தூர் - 12.
போன் : 233489
வீடு : 443778



நாகரீக மங்கையரின்
நன்னீர் முத்துக்களின் நவநாகரீக
டிசைன்கள், தரம்மிக்க
தங்கமுலாம் பூசப்பட்ட
அமெரிக்கன் வைர நகைகள்!

இணையற்ற
விலைகளில் பெறும்
வாடிக்கையாளர்களின் மகிழ்ச்சி.
சிரிப்பே இங்கு குலுக்கல்!

ஈடற்றஙங்கள் சேவையில் பெறும் பரிசு,
பிரதிபலிக்கும் உங்கள் பேரெழில்!!
வாங்கி மகிழ்ந்திட வாருங்கள்,

## ஸ்ரீ ஜகந்நாத் ஜெம்ஸ் 'N' ஜூவெல்ஸ்

*36, சவுத் உஸ்மான் சாலை,*
*தி. நகர்,*
*சென்னை - 600 017.*

**(The heartsome shop in the heart of the city)**



## விளம்பரம்

தமிழ் இன மொழிநலம் விழையும் அமைப்புகள் தங்களுடைய அமைப்பின் விவரங்களை, எங்கள் இசை மன்றச் செய்திகளைத் தெரிவிக்கவும், தொடர்பு கொள்ளவும் வசதியாக கீழ்க்கண்ட விவரங்களை எழுதி அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

1. மன்றத்தின் (அ) அமைப்பின் பெயர் : ..............................

2. முகவரி : ..............................

3. தலைவர், செயலாளர் பெயர் : ..............................

4. மன்றம் (அ) அமைப்பின் நோக்கம் : ..............................

அனுப்ப வேண்டிய முகவரி :

## தந்தை பெரியார் தமிழ் இசை மன்றம்

28, ச.ப. சாலை,
அடையாறு, சென்னை - 600 020.



## BESTDOOR

**Which is a BESTDOOR?**

A BESTDOOR *is one which is 100% Water Proof & unaffected by adverse climatic condition.*

Our Bestdoors (Reinforced Fibre Glass Plastic Door) satisfies these requirements.

A product of
**QUALITY DECOR**
2, Velacherry Road,
Little Mount, Madras- 15
PHONE 2351988

# Kalki Shopping Page

## SOWBAGHYA

### THE GRINDER PEOPLE

32-A, North Usman Road,
T.Nagar, Madras - 600 017.
Phone : 8253547/8252908

314, Perundurai Road,
ERODE - 11.
Phone : 77945, 72965

1/19, Selva Nagar, 1st Street
Ponnagar Extension,
Trichy - 1. Ph : 42994

162, Virapillai Street,
Bangalore - 560 001.
Phone : 5587587



### டக்கரான டிராலி!

வீட்டிலோ, காரியாலயத்திலோ, தோட்டத்திலோ அல்லது ஓட்டலிலோ, ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குப் பல பொருள்களை/கோப்புகளை/உணவு வகைகளை/ ஒரே சமயத்தில் எடுத்துச் செல்ல வேண்டியிருக்கிறதா? இரண்டு கைகள் போதவில்லையே என்று எரிச்சல் ஏற்படுகிறதா? கவலை வேண்டாம். பிரின்ஸ் பாலி டிராலி உதவக் காத்திருக்கிறது. பல்வேறு நிறங்களில், வடிவங்களில், அளவுகளில் கிடைக்கும் இந்தப் பிளாஸ்டிக் டிராலிகள் இலேசானவை. சுலபமாகக் கழற்றி மீண்டும் பூட்டலாம். விலை ரூ. 150 முதல் ரூ. 450 வரை.

PRINCE PLASTOWARE,
33, Marol Co-Op. Industrial Estate,
M. V. Road, Andheri (E) Bombay - 400 059.

## நீங்கள் இல்லாமலா இந்தப் போட்டி?

ஒரு சவரன் தங்க நகை பரிசு

### பெண் ஒரு பூ - புயல்

அவசியம் கலந்து கொள்ளுங்கள். சரியான விடையைக் குறியிட்ட கூப்பன்களுக்கு குலுக்கல் முறையில் பரிசு உண்டு.

எழுத வேண்டிய முகவரி:

ஃபாஹிமாஸ்



ஜுவல் ஹவுஸ்

78, உஸ்மான் ரோடு,
(ரங்கநாதன் தெருஎதிரில்)
தி.நகர், சென்னை 600 017.
போன் 445744, 446073

சென்னை உஸ்மான் சாலையில் மட்டும்

# Kalki Shopping Page

MAXIMA - A Unique Group of Companies




FOR HIGHEST INTEREST

and

HIGHEST SAFETY

See Page No. 8

Maxima - Maximum Dependability

## இனி திருடனைக் கண்டால் பயம் வேண்டாம்!

பிரபல R.K.N. ஒரிஜினல் சிதம்பரம் கோல்டு கவரிங் நகைகள் தருகிறது தகுந்த பாதுகாப்பு!

எங்களிடம் ½ கிராம், 1 கிராம் செயின், நெக்லஸ், வளையல், கம்மல் உத்திரவாதத்துடன் கிடைக்கும். உபயோகித்தபின் திரும்பக் கொடுத்தால் தகுந்தாற்போல் பணம் கிடைக்கும். திருமணம் மற்றும் விசேஷ வைபவங்களுக்கு நகைகள் வாடகைக்கு கிடைக்கும். வெள்ளி ஜரிகை உருக்கித் தரப்படும். விலைக்கு வாங்கப்படும்.

**R.K.N. கோல்ட் கவரிங்**
75, ரங்கநாதன் தெரு, தி. நகர்,
சென்னை - 600 017.
போன் - 445448

SIBI ADS

## ஆங்கிலம்

எழுத, பேச, நேரிலும், தபாலிலும்

+2 பிரைவேட்டாக எழுத LAB வசதி

9 வது தேறியவர்கள் SSLC

451411 நேரமும்



ஜீனியஸ் காலேஜ்



புன்னகைக்கு ஒரு விஜயா
பொன் நகைக்கு ஒரு சாந்தி

மங்கையரின் அழகுக்கு அழகு சேர்க்கும் பொன் ஆபரணங்களுக்கு கைராசியான நிறுவனம்



## சாந்தி கோல்டு ஹவுஸ்




72, உஸ்மான் ரோடு,
தி.நகர்,
சென்னை - 600 017.
தொலைபேசி : 441730

எங்கள் மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.



போனால் போகட்டும் போடா... இந்தப் பதவியல் நிலையாய் இருந்தவன் யாரடா.... போனால் போகட்டும் போடா....
இதுவரைக்கும் நல்லாத்தான் பாடிட்டிருந்தீங்க இப்ப ரொம்ப உணர்ச்சிகரமா பாடி அசத்துறீங்க
சட்டம் நிறைவேறியது!

செப்டம்பர்ல விலைவாசி குறைஞ்சுடும்... உன் பிள்ளைகளுக்கு வேலை கிடைச்சுடும்... இனிமே உனக்கு சுக்கிர தசைதான்...
எப்ப ஜோசியம் கேட்டாலும் இதையே-தான் சொல்றீங்க... நீ எடுக்கிற எல்லா சீட்டுலேயும் ஒரே மாதிரிதான் எழுதியிருக்குமா?
மன் மோகன் சிங்

வெச்சிருந்தேன் இப்ப முடிச்சு அவிழ்ந்துடுச்சே...
தலைதூக்கும் உட்கட்சிப் பூசல்கள்



ஓம்

# கல்கி




1994
ஜூன் 19
பவ
ஆனி 5
மலர் : 52
இதழ் : 47


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## திராட்சைத் தோட்டச் சிந்தனைகள்!

நிதிக் கமிஷன் தலைவர் கே.ஸி. பந்த்தும், நிதி அமைச்சர் மன்மோகன் சிங்கும் அடுத்தடுத்து தமிழகத்துக்கு விஜயம் செய்து திரும்பிச் சென்றும் விட்டனர். இருவருக்கும் விருந்தும் பரிசும் தந்து உபசரித்த முதல்வர், இருவரிடமும், 'அதற்கு உதவுங்கள்; இதற்குப் பணம் கொடுங்கள்' என்று பட்டியல் தந்து விட்டுப் 'பொறுப்புத் தீர்ந்தது' என்று ஓய்வெடுக்க ஹைதராபாத் திராட்சைத் தோட்டத்துக்குப் போய் விட்டார்! அங்கேயாவது சிந்தித்தால் சரி!

மன்மோகன் சிங், வீராணம் திட்டத்துக்கும் சென்னை நகர அபிவிருத்தி திட்டத்துக்கும் உலக வங்கியின் உதவியைப் பெற்றுத் தர முயற்சிப்பதாக வாக்களித்தார். பந்த், ஏழைகளுக்கு வீடு கட்டித் தருவது போன்ற சில திட்டங்களுக்கு மத்திய அரசின் நிதி உதவி கிடைக்கும் என்று உறுதியளித்தார். இதனால் எல்லாம் தமிழ்நாட்டின் தலைவிதியை மாற்றி எழுதி விட்டதாகாது என்பது அவர்களுக்கே தெரியும்.

இருவருமே ஒரு முக்கியமான விஷயத்தை வலியுறுத்தி அறிவுரை வழங்கி இருக்கிறார்கள். அது, மானியங்களை வழங்குவதும் இலவசத் திட்டங்களை அமுல்படுத்துவதும் தவறு; அதனால் நாட்டின் பொருளாதாரம் சீர்கெட்டிருக்கிறது என்பதுதான். இதில் பெருமளவு உண்மை இருக்கிறது. இலவசத் திட்டங்களுக்கும் மானியங்களுக்கும் கடைசியில் மக்களின் வரிப்பணம்தான் பயனாகிறது என்பதைப் பார்க்கும்போது, இலவசம் என்பதே வெறும் ஏமாற்றுதான் என்றாகிறது. 'பணக்காரர்களிடம் வரி வசூலித்து ஏழைக்கு உதவுகிறோம்' என்பதும் இன்றையப் பொருளாதாரச் சூழலில் வெறும் கண்துடைப்பே. ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, கண்ணுக்குத் தெரியாத மறைமுக வரிகளை மிக அதிகமாக ஏழைபாழைகள்தாம் தருகிறார்களே தவிர, பெரும் பணக்காரர்கள் அல்ல. அவர்கள் தரும் வருமான வரி போன்ற நேர்முக வரிகள் ஒப்புநோக்க மிகவும் குறைவு. ஏழைகளை உறிஞ்சி பெறப்படும் பணத்தை மத்திய, மாநில அரசுகள் ஒரு தர்மகர்த்தா பொறுப்பில் இருந்து, வீணாகாமல் கவனத்துடன் மக்களுக்கு நிரந்தரப் பயன் தரத்தக்க விதத்தில் சிக்கனமாகச் செலவிட வேண்டும். இனிமேலும் புதிய இலவசத் திட்டங்களை அறிமுகப்படுத்தாமலும், இருக்கிற இலவசத் திட்டங்களைப் படிப்படியாகக் குறைத்தும் பொருளாதாரத்தைச் சீர்படுத்த வேண்டும். இதில் மாநில அரசுக்கு அறிவுரை வழங்குவதோடு நில்லாது, மத்திய அரசும் அவ்வாறே நடந்து கொள்ள வேண்டும்.

முக்கியமான ஓரிரு அம்சங்களில் ஏழைகளுக்கு உதவிட மானியங்கள் கொள்கையை அமுல்படுத்துவதில் தவறில்லை. ஆனால் அதையே அளவுக்கு அதிகமாக விஸ்தரிக்கும் போது நன்மை செய்வதற்குப் பதில் பொருளாதார ரீதியில் மட்டுமின்றி மக்களின் மனப்பான்மையிலும் தீங்கு விளைவிக்கும். இலவசங்களுக்கே பழகிப் போக, மக்களிடம் சோம்பல் வளரும். வோட்டுப் பிடிக்கும் நோக்கில் எல்லா விவசாயிகளுக்கும் இலவச மின்சாரம், திருப்பித் தர அவசியம் இல்லாத கடன் வசதி, வேஷ்டி - புடைவை விநியோகம் என்று விரிவாக்கம் செய்வது, அரசியல்வாதிக்குத்தான் ஆதாயமே தவிர, மக்களுக்கு அல்ல. பட்டினி கிடப்பவன் அவ்வப்போது கிடைக்கும் இலவச மிட்டாயின் இனிப்பில் மயங்குவது போல்தான் மக்கள் நிலை!

மானியங்கள், இலவசங்களைக் குறைப்பதுடன் டம்பாச்சாரி செலவுகளையும் திட்டங்களையும் அரசு கைவிட வேண்டும். அவ்வாறு செய்தால் நிதிப் பற்றாக்குறைக்கே இடமில்லை. ஓர் உதாரணம் தேவையெனில், குலசேகரப்பட்டினத்தில் கடலிலிருந்து மின்சாரம் எடுக்கும் திட்டத்தில் ஒரு யூனிட்டின் விலை ரூ. ஐந்துக்கும் மேல் ஆகும் என்று மதிப்பிடப் பட்டுள்ளது! இத்தனை விலை உயர்ந்த மின்சாரம், ஏற்கெனவே படு நஷ்டத்தில் உள்ள மின்வாரியத்துக்கோ ஏழைத் தமிழனுக்கோ கட்டி வருமா? முதல்வரின் புதிய வீராணம் திட்டம் குறித்தும் விஷயமறிந்தவர்கள் "விஷப் பரீட்சை" என்பதாக எச்சரிக்கிறார்கள். உலக வங்கி உதவி என்பதும் வட்டியுடன் திருப்பித் தரவேண்டிய கடனே தவிர, மானியமல்ல! இப்படி எத்தனையோ அடுக்கலாம்!

அடிப்படையான விஷயம், ஆட்சிப் பொறுப்பில் உள்ளோருக்கு அடக்கம் வேண்டும். பிரபல்யத்துக்காகக் காரியம் பண்ணாமல், மாற்றுக் கருத்துக்களையும் எடை போடும் மனப்பக்குவம் வேண்டும். ஆனால் உள் (லாப)நோக்கம் அதிகரித்துவிட்ட நிலையில் அறிவுரைகளை யார் லட்சியம் பண்ணப் போகிறார்கள்?



# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806
223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354
கிளை: 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582



### பிக்சட் டெபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

| ரொக்கப் பத்திரங்கள் | தொகை | பத்திரங்கள் மதிப்பு | தொகை | பத்திரங்கள் மதிப்பு |
|---|---|---|---|---|
| 36 மாதங்கள் | Rs.2,925/-<br>Rs.5,850/- | Rs.5,000/-<br>Rs.10,000/- | Rs.8,775/-<br>Rs.11,700/- | Rs.15,000/-<br>Rs.20,000/- |

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |
| Rs.25,280 | Rs.24,000 | Rs.24,000 | Rs.2,25,280 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ.580/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.40,000/- பெறுவீர்.

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/-
முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு
முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |
| Rs.7,500 | Rs.8,880 | Rs.10,725 | Rs.15,000 | Rs.19,010 |

### ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| டிபாசிட் ரூ.25ன் பெருக்கம் | மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | |
|---|---|---|---|---|
| | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 48 மாதம் |
| Rs.25 | Rs.330 | Rs.715 | Rs.1,180 | Rs.1,800 |
| Rs.50 | Rs.660 | Rs.1,430 | Rs.2,360 | Rs.3,600 |

**பென்ஷனர் நலத்திட்டம்**
19.5% P.a.
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**சேமிப்பு திட்டம்**
10% P.a.
காசோலை பெறும் வசதி உண்டு

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

மாத வைப்புக்கான செக்குகள் முன்கூட்டியே வழங்கப்படும்.
தனயோகம் டிபாசிட் திட்டம் 20%
குறைந்த அளவு ரூ.20,000 டிபாசிட்
காலம் 5 ஆண்டுகள்

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❒ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❒ வெள்ளி விடுமுறை

# "என்னைப் பற்றி



# என் படங்கள் பேசும்!"

ஆக்ஷன் கிங், தமிழ்நாட்டு ஜாக்கிசான், அதிரடி ஹீரோ - மாயப் பட்டப் படலங்களையெல்லாம் விலக்கிப் பாருங்கள். அர்ஜுனுக்குள் உலவிக் கொண்டிருக்கும் சீனிவாசன் என்கிற சராசரி இந்தியனை இனம் காணலாம். 'செட்'டுக்குள் அவர்காட்டும் ஆக்ரோஷம், துள்ளல், கொஞ்சல், மிஞ்சல் எல்லாம் வெளியே வந்ததும் காணாமல் போய் விடுகின்றன.

"அடுத்த படத்துல சான்ஸ் குடுக்காட்டா நான் செத்துடுவேன் தலைவா!" என்று கையைப் பிடித்துக் கொண்டு முரண்டு பிடிக்கும் இளைஞனை, "எப்பிடி சாவப் போற? விஷமா? தூக்கா? தண்ணில விழுந்தா? நான் ஒரு வழி சொல்லட்டா? போய்யா, போய் முன்னேற வழி பாரு. பைத்தியம் மாதிரி உளறிட்டிருக்காதே" என்று கண்டித்து அனுப்புகிறார்.

வேலூரிலிருந்து வந்திருக்கும் ஒரு தியேட்டர் ஓனரின் குழந்தைகளைத் தூக்கி வைத்துக் கொஞ்சி அனுப்புகிறார்.

"எல்லாமே பயமா இருக்கு. இந்த புகழ், பணம், ஸ்டார் வேல்யூ. எல்லாமே. இதுக்கெல்லாம் கொஞ்சமாவது நம்மைத் தகுதியானவனா ஆக்கிக்கணுமேன்னு பயம். அதான் ஃபைட் ஆகட்டும், வேற எதுவாகட்டும் - ரிஸ்க் எடுக்கத் தயங்கறதே இல்லை" என்று ஆரம்பிக்கிறார்.

## அர்ஜுனுடன் ஒரு சந்திப்பு

அர்ஜுனின் அப்பா ஒரு நடிகர். இங்கல்ல; கன்னடத்தில். பெயர் சக்தி பிரசாத். நூற்றுக்கு மேற்பட்ட படத்தில் கேரக்டர் ரோல் செய்தவர்.

"நீ நடிக்க வராதடா. இந்தத் தொழில் ஆளை முழுங்கிவிடும். படிச்சி, போலீஸ்காரனா ஆக முயற்சி பண்ணுன்னு அப்பா சொன்னார். எந்த வேளைல சொன்னாரோ, பதினாறு வயசுல நடிக்க வந்துட்டேன்.

**ஒரு நல்ல விஷயத்தை யார் சொன்னாலும் மக்கள் ஒப்புக் கொள்வார்கள் என்பது 'ப்ரதாப்' படத்தில் எனக்குப் புரிந்தது.**

கன்னடப் படம். முதல் படத்திலேயே ஹீரோ. ஹீரோயின் இல்லாத ஹீரோ! அம்ரீஷ்பூரி வில்லன். என்ன ஒரு காம்பினேஷன் பாருங்க!" என்று சிரிக்கிறார்.

"அடுத்தடுத்து ஒருசில கன்னடப் படங்களில் நடிச்சேன். 'ஆஷா'ன்னு ஒரு படம் ஓடிச்சி. வேற ஒண்ணும் போணியாகலை. சும்மா சண்டை போடத்தான் லாயக்குன்னு சொல்லிட்டாங்க. வீட்ல சும்மா இருந்தேன். அப்பா சொன்னதையும் கேட்கலை. பேர் சொல்றா மாதிரி படங்களும் ஒண்ணும் வரலை. கடவுளா பார்த்து, ராமநாராயணனை அனுப்பி வெச்சார். 'நன்றி'ன்னு தமிழ்ப் படம். அப்ப ஆரம்பிச்சது. கிட்டத்தட்ட 99% தமிழனா ஆயிட்டேன். அப்புறம் நிறைய தமிழ்ப் படம் வந்தது."

அவற்றில் ஒன்று கூட உருப்படியாக இல்லை என்பதை அர்ஜுன் பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்.



"எல்லாம் அவுட். 90-91ல் என் கையில் ஒரு படம் கூட இல்லை. காரணம், முந்தின வருஷம் ரிலீஸான மூணு படங்களும் இமாலய ஃப்ளாப்! வெறுத்துப் போயிட்டேன். மூட்டை கட்டிக்கிட்டு பெங்களூர் போயிடலாமான்னு யோசிச்சேன். அப்பதான், ரஜினி ஒருதரம் சொன்னார் : 'அர்ஜுன், தமிழ் ரசிகர்களை சாதாரணமா நினைக்காதீங்க. வெயிட்டா, மனசுல நிக்கறாப்பல ஒரு படம் குடுங்க. அப்புறம் பாருங்க, ஆயுசுக்கும் உங்களைத் தாங்கு, தாங்குன்னு தாங்குவாங்க.' அவர் கொடுத்த தைரியம்தான் இன்னைக்கு வரைக்கும் என்னை இங்க இருக்க வெச்சிருக்கு."

ஆனால், ரஜினி சொன்ன 'வெயிட்'டான படம் அப்புறமும் அர்ஜுனுக்கு அமையவில்லை. தொடர்வதாகப் பல தோல்விப் படங்கள்.

"நட்பு முறையில் என்னை வந்து கேக்கறாங்க. மறுக்க முடியலை. படம் எடுக்கறதுல இருக்கற

ஆர்வம், யாருக்கும் கதை அமைப்புல இல்லை. 'ஆத்தா நான் பாஸாயிட்டேன்', 'நம்ம ஊரு சிப்பாய்' இந்த மாதிரி ரெண்டு மூணு படம் இந்த வகையில சேர்த்தி.

சங்கிலி முருகன், 'நம்ம ஊரு சிப்பாய்' கதை சொன்ன போதே எனக்குத் தெரியும். இது தேறாதுன்னுட்டு. அவர்கிட்டேயும் சொன்னேன். "ஓடுதா, இல்லையா பாருங்க"ன்னு ஒரேயடியா அடிச்சி சொன்னார். என்ன ஆச்சு? சூப்பர் ஃப்ளாப். அப்புறம் தான் முடிவு செய்தேன். இனியும் ஏமாறப் போவதில்லைன்னு. நானே டைரக்ட் பண்ணலாம். நானே கதை எழுதலாம். நானே நடிக்கலாம்கிற தீர்மானத்துக்கு வந்தேன்."



இயக்குநராவதற்கு முன்பு, தாம் நடித்த ஒவ்வொரு படத்திற்கும் - மானசீகமாக - தாமே உதவி இயக்குநராகப் பணியாற்றிப் பார்த்திருப்பதாகச் சொன்னார் அர்ஜுன்.

"தொழில்நுட்ப ஆர்வம் எனக்கு இருந்தது. 'கேமரா, கோணங்கள், லென்ஸ், ட்ராலி, எடிட்டிங், மிக்ஸிங் இப்படி ஒவ்வொரு அம்சத்தையும் உற்று கவனிப்பேன். மனத்திற்குள் அவற்றை என் பாணியில் செய்து பார்த்துக் கொள்வேன். ஆனால் வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேச மாட்டேன். இந்த 'கவனிப்பு'தான். நான் டைரக்டராவதற்கு ஆதாரமாயிருந்தது."

சொந்தமாகப் படம் தயாரித்து, இயக்க முடிவு செய்ததும் கோடம்பாக்க வட்டாரம் அர்ஜுனைப் பயங்கரமாகப் பயமுறுத்தியிருக்கிறது. 'அவ்ளோ தான், அர்ஜுன் ஆட்டம் குளோஸ்' என்று கைகொட்டிச் சிரித்திருக்கிறது. அவரது மனைவியிடம் போய், முன்னதாகத் தம் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்திருக்கிறது.

"ஆனால் நான் துணிந்து விட்டேன். 'சேவகன்' படம் எடுத்து முடித்து, டிஸ்ட்ரிப்யூட்டர்களைக் கூப்பிட்டால், ஒருத்தரும் வாங்கத் தயாரில்லை. பதினைந்து லட்சம் போகும் ஏரியாக்காரர்களெல்லாம் ஒரு லட்சம், ஒன்றரை லட்சம் என்று அடி மாட்டு விலைக்குக் கேட்டார்கள். 'படத்தைப் பாருங்கள். அப்புறம் ரேட் பேசலாம்' என்றேன். முழுப்படம் முடிவதற்குள் அத்தனை ஏரியாவும் விற்றுப் போயின."

'சேவகன்' வெற்றி, சின்னக் குழந்தைக்குக் கூடத் தெரியும். ஒரு இயக்குநராக - முற்றிலும் மாறுபட்ட இயக்குநராக அர்ஜுன் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்ட முதல் படத்தில் கிடைத்த இமாலய வெற்றி, உடனே, உடனே அடுத்த படம் செய்யச் சொன்னது.

"ப்ரதாப். ஒரு நல்ல விஷயத்தை யார் சொன்னாலும் மக்கள் ஒப்புக் கொள்வார்கள் என்பது இந்தப் படத்தில் எனக்குப் புரிந்தது. கதை என்ன? ரொம்ப சுலபம். ஒரு அப்பா, ஒரு அம்மா, ஒரு அண்ணன், ஒரு தங்கை. போதை மருந்து கும்பலால் தங்கை பாதிக்கப் பட்டு இறக்கிறாள். அண்ணன், அந்தக் கூட்டத்தை அழிக்கிறான். இவ்வளவுதான். சாதாரண மசாலா கதையாக மேலோட்டமாகப் பார்க்கையில் தோன்றினாலும், இப்படத்தில் நான் வைத்திருந்த அந்தச் சின்ன ஹிந்து - கிரிஸ்டியன் மோதல் விஷயத்தை, முடிவில் சொன்ன அந்த நீதியை மக்கள் ஆரவாரமாக வரவேற்றிருந்தார்கள். எனக்கு அப்போதுதான் மூச்சு வந்தது. அதன் பாதாளச் சரிவுகளுக்குப் பின் - ஒரு வழியாக ஜெயித்து விட்டேன்!"

'நீதி' சொல்லும் விஷயத்தில் அர்ஜுன் விடாப்பிடியாக இருக்கிறார். சேவகன், ப்ரதாப்

அழுத பிள்ளை சிரிக்குமாம்
அமர்ந்து கோகுலம் படிக்குமாம்!

கோகுலம்

ஜூலை இதழில்...

- சுறாமீனுக்கு எத்தனை பற்கள்?
- அனுமனை வென்ற கோவர்த்தனன்



- கலைப் பொருள் செய்யுங்கள்
- ஏராளமான கதைகள், போட்டி, பேட்டி இன்னும் எத்தனையோ!

மூன்றே ரூபாய்க்கு 96 பக்கங்கள்!

பெற்றோரே கோகுலம் வாங்குங்கள்
பிள்ளைகள் மகிழ்வதைக் காணுங்கள்!

முதல், சமீபத்திய ஜெய்ஹிந்த் வரை 'முடிவில் ஒரு போதனை' என்பது அவரது 'ஸ்டைலா'கியிருக்கிறது. இதனை 'ஸ்டைல்' என்று சொல்வதை அர்ஜுன் கடுமையாக மறுக்கிறார்.

"நான் ஒரு இந்தியன். எனக்கொரு பொறுப்பு இருக்கிறது. எனக்கு மட்டுமல்ல - ஒவ்வொரு குடிமகனுக்கும். சீரழிவுகளைத் தட்டிக் கேட்கும் பொறுப்பு. அவலங்களை அகற்றும் பொறுப்பு. தீமையை இனம்காட்டும் பொறுப்பு. போதிப்பது என் நோக்கமல்ல. எனக்கு அதற்குத் தகுதியும் இல்லை. சமகாலச் சீரழிவுகளைச் சொல்லி, அதிலிருந்து மீளுவதன் அவசியத்தைச் சொல்வது ஒரு கட்டாயம் என்றே நான் கருதுகிறேன். வியாபார உத்தியில் இவற்றைச் சேர்க்கும் கீழ்த்தர சிந்தனை எனக்கில்லை. தவிர, இதுபோன்ற நல்ல விஷயங்களெல்லாம் வியாபார உத்தியுமல்ல என்பது உங்களுக்கே தெரியும்!"

வியாபார உத்தியாக என்னென்ன சேர்க்க வேண்டும் என்பதும் அர்ஜுனுக்குத் தெரியாததல்ல.

**வெ**றும் ஆக்ஷன் ஹீரோவாக இருந்தவரை ஒரு நல்ல நடிகராகவும் இனம் காட்டிய ஜென்டில்மேனை அத்தனை சுலபத்தில் மறந்து விட முடியாது. அர்ஜுனே சொல்வது போல், அவரை, அவருக்கு இனம் காட்டிய படம். ஆனால், அதற்குப் பிறகும், தன்னை எந்த பெரிய இயக்குநர்களும் கவனிக்காதது குறித்து வருத்தப்படுகிறார்.

"ஒரு பாரதிராஜாவோ, பாலசந்தரோ, பாக்யராஜோ என்னை ஏன் இன்று வரை கவனிக்கவில்லை என்று வியப்பாகவும், வேதனையாகவும் இருக்கிறது. ஒருவேளை இயக்குநராகி விட்டவனை எப்படி நடிக்க வைப்பது என்று கருதுகிறார்களோ என்னவோ."

அர்ஜுன், பிறர் படங்களிலும் நடித்துக் கொண்டுதானிருக்கிறார். அடுத்து வரப் போகும் வாசுவின் 'சாது', தனக்கு மற்றுமொரு சூப்பர் ஹிட்டாக அமையும் என்று நம்பிக்கையோடு கூறுகிறார். இடையிடையே சொந்தப் படம். சொந்த டைரக்ஷன். (இந்திப் படம் டைரக்ட் பண்ணப் போறாருங்க!)

"அப்பா பேச்சைக் கூடக் கேட்காமல் சினிமாவுக்கு வந்தாயிற்று. பத்தோடு பதினொன்றாக இருந்து விட்டுப் போக எனக்கு விருப்பமில்லை. சர்வதேசத் தரத்தில் தமிழ் சினிமா பேசப்பட வேண்டும். பேச வைப்பேன்! இதை நான் சொல்வதை விட, நாளை வரப் போகும் என் படங்கள் சொல்லும். Wait and see!"

சந்திப்பு : **ஔரங்கசீப்**

மேலட்டை வண்ணப்படம், இதர படங்கள் : **யோகா**



• போஸ் குடுக்கலீங்க! நிஜமாவேதான் ஓட்டுறேன்!

# ஒரு கத்தரிக்காய் கார் ஓட்டுகிறது!

**ஹை**தராபாத்தின் முறையற்ற போக்குவரத்தில் அந்த மாருதி விரைந்து கொண்டிருக்கிறது. ஓட்டுனர் ஸீட்டின் பின்னால் உட்கார்ந்திருக்கும் நமக்கு டெலிபிரிண்டராய் இதயம் படபடக்கிறது.

"பயப்படாதீங்க ஸார்" என்கிறார் ஓட்டுனருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் ஜானி பாபா. தெருவில் செல்வோர் நின்று பார்த்துவிட்டுக் கண்களை அகல விரிக்கின்றனர். பெட்டிக் கடையில் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டிருக்கும் டிராபிக் கான்ஸ்டபிள் 'பீ...பீ' என்று விஸில் ஊதுவது கேட்கிறது. எதைப் பற்றியும் கவலைப்படாமல், பத்திரமாக நம்மைக் கிளம்பிய இடத்துக்கே கொண்டு வந்து சேர்க்கிறார் ஓட்டுனர்.



• அம்மாவுடன் ஜானி



"தலைவர் இருந்தாலும் ரொம்ப ஸ்போர்டிவ்வா இருக்கார்."

"கவனிச்சேன். கூட்டத்திலேர்ந்து யாரோ விட்டெறிஞ்ச செருப்பைப் பாய்ஞ்சு கேட்ச் பிடிச்சிட்டு 'ஹௌ ஸ் இட்' அப்பீலங்கறாரே!"

- வேதபுரி எஸ். ரமேஷ்

"எப்படி என் டிரைவிங்?" என்று மழலைத் தனமான ஹிந்தியில், காரிலிருந்து குதித்துக் கொண்டே கேட்கிறாள், ஓட்டுன ரான நாலரை வயது ஜூஹி அகர்வால்.

"அடேயப்பா!" என்ற ஆச்சர்யத்துடன் இவளைப் போய் சந்தேகித்தோமே என்ற அசடு வழிதலும் சேர, "பிரமாதம்" என்று குழந்தையின் முதுகில் தட்டிக் கொடுக்கிறோம்.

"இதென்ன ஸார் பிரமாதம்! மூன்று வயதிலேயே ஜூஹி கார் ஓட்டக் கற்றுக் கொண்டு விட்டாள்!" என்கிறார் அவளது பயிற்சியாளரான ஜானி பாபா.

மரவியாபாரியான பிரமோத் குமார் அகர்வாலின் செல்லப் பெண்தான் ஜூஹி அகர்வால். குழந்தையாய் இருக்கும் போது, மடியில் அவளை வைத்துக் கொண்டு கார் ஓட்டுவார் பிரமோத். ஜூஹி சும்மா இருக்க மாட்டாள். ஸ்டியரிங்கைத் திருப்புவாள்; கிளட்சை அழுத்துவாள்....

ஒருநாள் அகர்வால் அவளிடம், "கத்துக்கிறயா?" என்று கேட்டார். 'ஓ' என்றாள் ஜூஹி. பயிற்சியாளர் ஜானி பாபா நியமிக்கப்பட்டார்.

"அவள் கற்றுக் கொண்ட வேகத் தைப் பார்த்து நான் ரொம்ப ஆச்ச ரியப்பட்டுப் போனேன். வண்டியை ரிவர்ஸில் எடுப்பதற்கு முதலில் கொஞ்சம் கஷ்டப்பட்டாள். பிறகு அதுவும் சரியாகி விட்டது" என்கி றார் ஜானி பாபா. ஜூஹி ஓட்டு வதற்காக கிளட்ச், ப்ரேக், ஆக்ஸி லேட்டர் ஆகியவற்றை அவளுக்கு எட்டும் உயரத்துக்கு ஏற்றிக் கொள் ளும் வசதி காரில் இருக்கிறது. அது போலவே ஸீட்டையும் கொஞ்சம் உயரமாக்கிக் கொள்ளலாம்.

"ஜூஹி சாலையில் ஓட்டுவதற்கு முதலில் டிராபிக் போலீஸார் ஆட் சேபம் தெரிவித்தார்கள். அப்புறம் ஒரு 'சாதனை' என்ற அளவில் அவ் வப்போது சிறப்பு அனுமதி கொடுக் கிறார்கள்" என்றார் பிரமோத்.

சமீபத்தில் அலகாபாத், கோரக் பூர் ஆகிய இடங்களுக்குச் சென்று ஒரு கலக்குக் கலக்கி விட்டு வந்தி ருக்கிறாள் ஜூஹி. "சாலையில் ஆயிரக்கணக்கான மக்கள் கைதட்டி இவள் ஓட்டுவதை உற்சாகப்படுத் தார்கள்" என்றார் பிரமோத்.

"சென்னையில் ஏதாவது அமைப்பு ஏற்பாடு செய்தால், முக்கியமான சாலைகளில், பிஸியான போக்குவரத்தில் ஜூஹி ஓட்டிக் காட்டத் தயார்" என்கிறார் பிரமோத்.

இன்னொரு விஷயம் - டிரைவிங் தவிர ஜூஹிக்குப் பிடித்த மற் றொன்று - நீச்சல் குளத்தில் ஒன்ப தடி உயரத்திலிருந்து குதிப்பது! இரண்டு வயதிலேயே நீச்சல் கற்றுக் கொண்டு விட்டாளாம் இந்தச் சுட்டிப் பெண்!

- ஆரெஸ்வி



# சுவையான இல்லறத்திற்கு இவையும் வேண்டும்!

ஆம். இனிமையான இல்லறத்திற்கு
அன்பு, அரவணைப்பு, பரஸ்பரம்
புரிந்துகொள்ளுதல்-இப்படி
உளம்சார்ந்த விஷயங்கள்
மட்டும்தானா? உணவுசார்ந்த,
அம்சங்களும் உள்ளனவே!

SMB ரவா, மைதா, கோதுமை
மாவுகளில் பூரி, கேக், பப்ஸ்,
உப்புமா, பிரெட், ரவா இட்லி, ரவா
லட்டு என்று விதவிதமாகச்
சமைத்திடுங்கள். இனிய
குடும்பவாழ்வுக்கு சுவையான
அடித்தளம் அமைத்திடுங்கள்.

இப்பொழுது
பரிசோதிக்கப்பட்டு
நிருபணமான கூடுதல்
தரத்துடன் கிடைக்கிறது.

---

SMB மைதா, ரவை, கோதுமை
மாவுகள்
1 கிலோ, ½ கிலோ பாலிதீன்
பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

---




**சக்தி முருகன் ரோலர் பிளவர்
மில்ஸ் (பி) லிட்**

தபால் பெட்டி எண். 15, அவினாசி - 638 654,
கோயமுத்தூர் மாவட்டம். போன்: 2991, 2992.

**தரமென்றால் இதுதான் தரம். சுவையென்றால் இதுதான் சுவை**

SASI / 509 / 94

# தியாக பூமி

அமரர் கல்கி

உமா பேசியதைக் கேட்டுக் கொண்டே சம்பு சாஸ்திரி உள்ளே வந்தார். வக்கீல் விடைபெற்றுக் கொண்டு போனதும், அவர் சாவித்திரியின் பக்கத்தில் போய் ஸோபாவில் உட்கார்ந்தார்.

"நீ கடைசியிலே சொன்னது என் காதிலே விழுந்தது, சாவித்திரி!" என்றார்.

"ஆமாம் அப்பா! நான் செத்துக் கித்துப் போக மாட்டேன். நீங்களும் கவலைப்படாமலிருங்கோ!" என்றாள் சாவித்திரி.

"ரொம்ப சந்தோஷம், அம்மா! போனதெல்லாம் போகட்டும். நம்முடைய கஷ்டகாலமெல்லாம் தீர்ந்து போச்சு. இனிமேல் ஸ்ரீதரனும் சரியாயிருப்பான். இவ்வளவு பெரிய வீட்டிலே அவன் ஒருத்தனுக்குத்தானா இடமில்லை? அவனும் இருந்துட்டுப் போகட்டும்" என்றார் சாஸ்திரி.

"என்ன அப்பா சொன்னேள்? கோர்ட்டிலே கேஸ் போட்டு ஜயிச்ச மனுஷரோட என்னை இருந்து வாழச் சொல்றேளா? அது மாத்திரம் சொல்லாதேங்கோ, அப்பா! என்னால் முடியவே முடியாது!" என்று சாவித்திரி ஆத்திரத்துடன் கூறியபோது சாஸ்திரி உண்மையில் பயந்தே போனார்.

ஒரு நிமிஷம் கழித்து அவர், சாந்தமான குரலில், "சாவித்திரி! உனக்குத் தெரியாததற்கு நான் சொல்லப் போறதில்லை; இருந்தாலும் நீ இப்படிப் பிடிவாதம் பிடிக்கக் கூடாது. அந்தக் காலத்தில் உன் பெயர் கொண்ட சாவித்திரி என்ன செய்தாள், உனக்குத் தெரியாதா? அவள் யமனோடு போய்ப் போராடிச் சத்தியவானுடைய உயிரைக் கொண்டு வரவில்லையா? அப்பேர்ப்பட்ட உத்தமிகள் பிறந்த தேசத்தில் பிறந்துவிட்டு..." என்று சொல்லி வருகையில், சாவித்திரி குறுக்கிட்டாள்.

"அந்தக் கதையெல்லாம் இப்போது ஏன் சொல்றேள், அப்பா! அந்தச் சத்தியவான் இப்படித்தான் சாவித்திரியைச் சந்தியிலே விட்டிருந்தானா? எட்டு மாசத்துக் கர்ப்பிணியைத் தெருவிலே விரட்டியடித்தானா? இருக்காளா, செத்தாளா என்று கூடப் பார்க்காமல் இருந்தானா? அந்தப் பழைய கதையெல்லாம் இந்தக் காலத்துக்குப் பொருந்தாது, அப்பா!" என்றாள்.

"பழைய கதை வேண்டாம்; இந்தக் காலத்திலே நடக்கிறதைத்தான் கொஞ்சம் கவனியேன், அம்மா! நம் தேசத்திலே இப்போது எவ்வளவு பேர் எத்தனை மகத்தான தியாகங்கள் எல்லாம் செய்கிறார்கள்? பாரத தேசம் ஆதி காலத்திலிருந்தே தியாகத்துக்குப் பேர் போனதம்மா! அதனாலேதான் இந்த தேசத்தைத் **தியாக பூமி** என்று சொல்கிறார்கள். நீயும் கொஞ்சம் தியாகம் செய்யப்படாதா?" என்று சம்பு சாஸ்திரி கனிவு ததும்பிய குரலில் கேட்டார்.

ஆனால், சாவித்திரியின் மனம் கொஞ்சங்கூடக் கனியவில்லையென்று அவளுடைய பதிலிலிருந்து தெரிந்தது.

"தியாகமா, அப்பா! எப்பேர்ப்பட்ட தியாகம் வேணுமானாலும் நான் செய்யத் தயார், அப்பா! ஆனால் சுதந்திரத்துக்காகத்தான் தியாகம் செய்வேன்; அடிமைத்தனத்துக்காகத் தியாகம் செய்யமாட்டேன். இந்தக் காலத்தில் நமது தேசத்தில் தியாகம் செய்கிறவர்கள் எல்லாம் விடுதலைக்காகத் தியாகம்

## அருள்வாக்கு



**வே**தாக்ஷரங்களை எத்தனை கவனத்தோடு, ஜாக்கிரதையோடு, சொல்ல வேண்டும் என்பதற்குப் பாணினி மஹரிஷி செய்த 'பாணினீய சிக்ஷா'வில் ஒரு அழகிய ச்லோகம் இருக்கிறது.

*வ்யாக்ரீ யதா ஹரேத் புத்ரான்*
*தம்ஷ்ட்ராப்யாம் ந ச பீடயேத் ।*
*பீதா பதன பேதாப்யாம்*
*தத்வத் வர்ணான் ப்ரயோஜயேத் ॥*

'வேதாக்ஷரங்களை ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டும். சப்த ரூபம் கொஞ்சம்கூட குழறுபடியாகக் கூடாது. அதற்காக ரொம்பவும் நறுக்கு நறுக்கு என்றும் சொல்லக் கூடாது. வேத எழுத்துக்களை கீழே நழுவாதபடியும், அழுத்தி ஹிம்ஸிக்காமலும் உச்சரிக்கவேண்டும். எப்படியென்றால், ஒரு பெண் புலி தன் குட்டிகளைக் கவ்விக் கொண்டு போவது போல! பூனை, எலி முதலானதுகள் குட்டியைப் பல்லால் கவ்வியபடிதான் தூக்கிப் போகும். பல்லால்தான் கவ்வுகின்றன. கீழே விழாதபடி கெட்டியாகக் கவ்வுகின்றன. ஆனாலும் குட்டிக்கு வலிக்கிற மாதிரியாகக் கடித்து விடுகிறதா? இல்லை. அந்த மாதிரி நாசூக்காக அக்ஷரங்களை உச்சரிக்க வேண்டும் என்பது ச்லோகத்தின் பொருள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

செய்கிறார்களா, அடிமைத்தனத்துக்காகத் தியாகம் செய்கிறார்களா, அப்பா?"

"சாவித்திரி! உனக்கு எப்போதும் பிடிவாதம் மாத்திரம் ஜாஸ்தி, அம்மா!" என்று சாஸ்திரி சிறிது கோபம் தொனித்த குரலில் சொன்னார்.

அந்தச் சமயத்தில் தெருவில் தேச சேவிகைகள் தேசிய பஜனை செய்து கொண்டு வந்த சப்தம் கேட்டது. "பாரத மாதாகி ஜே!" "மகாத்மா காந்திகி ஜே!" என்ற கோஷம் எழுந்தது. சாவித்திரி எழுந்திருந்து ஜன்னலண்டை சென்று பார்த்தாள். தேசியக் கொடி தாங்கிய தேச சேவிகைகள்,

*"பந்த மகன்று நம்திரு நாடு*
*உய்ந்திட வேண்டாமோ?"*

என்ற கீதத்தைப் பாடிக் கொண்டு போனார்கள். அவர்கள் தெருவைக் கடந்து செல்லும் வரையில் சாவித்திரி அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, விரைந்து தன் உடைகள் வைத்திருந்த அறைக்குள் சென்றாள். தான் அணிந்திருந்த விலையுயர்ந்த ஆபரணங்களையெல்லாம் கழற்றி வைத்தாள். ஏற்கெனவே தயாராக வாங்கி வைத்திருந்த ஆரஞ்சு நிறக் கதர்ப் புடைவையை எடுத்து உடுத்திக் கொண்டாள். அப்பாவிடமும் சூழந்தையிடமுங்கூடச் சொல்லிக் கொள்ளாமல் வெளிக் கிளம்பிச் சென்றாள்.

# 64. தியாகம்

**அ**ந்தப் புகழ்பெற்ற வருஷத்தில் பாரதப் புண்ணிய பூமியில் நிகழ்ந்து வந்த அதிசயங்களைப் பற்றி முன் ஓர் அத்தியாயத்தில் கூறினோமல்லவா? அந்த அதிசயங்களில் எல்லாம் மகா அதிசயம், பாரத நாட்டின் நாரீமணிகள் அந்த வருஷத்தில் கண் விழித்தெழுந்த அற்புதமேயாகும். அதற்கு முன்னாலும் தேசத்தில், "ஸ்திரீகளுக்குச் சுதந்திரம் வேண்டும்," "பெண்களுக்கு ஆண்களுடன் சம உரிமை வேண்டும்" என்ற கிளர்ச்சி ஆங்காங்கு நடந்து கொண்டுதான் இருந்தது. ஆனால், அந்த வருஷத்தில் இந்த மாதர் உரிமைக் கிளர்ச்சி ஒரு புதிய ஸ்வரூபம் பெற்றது. அதற்கு அந்தப் புதிய ஸ்வரூபத்தைக் கொடுத்தவர் காந்தி மகான்தான் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

அதுகாறும், பாரதத் தாயின் புதல்விகளுக்கு வழிகாட்ட முன் வந்தவர்கள், "உங்கள் சுதந்திரத்துக்காகப் போராடுங்கள்," "ஆண்களுடன் சம உரிமைக்காகச் சண்டை பிடியுங்கள்" என்றெல்லாம் உபதேசித்து வந்தார்கள். இந்த உபதேசங்களைக் கேட்ட பாரதப் புதல்விகள் சிலர்,

*"கற்பு நெறியென்று சொல்ல வந்தார்*
*- இரு*

*கட்சிக்கும் அதைப் பொதுவில் வைப்போம்"*

என்றும்,

*"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்*
*பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்*
*எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்*
*இளைப்பில்லை காணென்று கும்பியடி"*

என்றும் சொல்லிப் பெண்ணுரிமைக்காகப் போராடத் தொடங்கியிருந்தார்கள்.

இத்தகைய மனப்பான்மை பரவிக் கொண்டிருந்த காலத்தில் மகாத்மா காந்தி தோன்றி, தேசத்துக்கு எல்லாத் துறைகளிலும் புதிய வழிகாட்டியது போல், மாதர் சுதந்திர இயக்கத்துக்கும் புதிய வழிகாட்டினார். "உங்கள் சுதந்திரம் அப்புறம் இருக்கட்டும்; நாடு சுதந்திரம் அடையும் வழியை முதலில் பாருங்கள்" என்று அவர் சொன்னார். "தேச சேவையில் ஈடுபடுங்கள்; சிறையில் சுதந்திரத்தைக் காணுங்கள்; விலங்கில் விடுதலையை அடையுங்கள்" என்று அவர் உபதேசித்தார். "தாயின் அடிமைத்தனத்தை நீக்குங்கள்; உங்கள் அடிமைத்தனம் தானே விலகிப் போகும்" என்று அவர் உறுதி கூறினார்.

காந்தி மகானுடைய போதனைக்குப் பாரத நாட்டின் பெண்குலம் செவிசாய்த்தது. தேசமெங்கும் ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் தாய்நாட்டின் தொண்டில் ஈடுபட்டார்கள்; அவர்களில் பலர் சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நின்றார்கள்; சிறை புகுந்தார்கள்; இன்னும் பல கஷ்டநஷ்டங்களையும் அனுபவித்தார்கள்.

இதனால், சாதாரணமாய் நூறு வருஷத்தில் நடக்கக் கூடிய பெண்குலத்தின் முன்னேற்றம் இந்த ஒரே வருஷத்தில் ஏற்பட்டது. வேறு நாடுகளில் எத்தனையோ காலம் ஸ்திரீகள் ஆண் மக்களுடன் போராடி, சண்டை பிடித்துப் பெற்ற உரிமைகளையெல்லாம் பாரதப் பெண்கள் அநாயாசமாகப் பெற்றுவிட்டார்கள். ஆண்களுடன் சரிநிகர் சமானமாக நின்று தேச விடுதலைப் போரில் கலந்து கொண்டவர்களுக்கு, சமூகத்தில் சம உரிமை கொடுக்க எவ்விதம் மறுக்க முடியும்?

**கோ**ர்ட்டில் உமாராணி - ஸ்ரீதரன் வழக்கு நடந்து கொண்டிருந்த காலத்தில், பொது ஜனங்களுடைய அநுதாபமெல்லாம் உமாராணியின் பக்கம் இருந்ததற்கு முக்கிய காரணம் மேற்கூறிய தேச நிலைமையேயாகும். இது உமாராணிக்கும் தெரியாமலில்லை. நாட்டில் நடந்து கொண்டிருந்த தேச விடுதலை இயக்கத்தைப் பற்றியும், அந்த இயக்கத்தின் முன்னணியில் நின்று சிறை புகுந்த வீரப் பெண்மணிகளைப் பற்றியும் உமாராணி அறிந்துதான் இருந்தாள். வழக்கில் தோற்றுப் போனால் என்ன செய்வது என்று அவளுடைய இருதய அந்தரங்கத்தில் தீர்மானம் செய்திருந்தாள்.

வேண்டாத புருஷனுடன் சேர்ந்து வாழும்படி சட்டம் நிர்ப்பந்தப்படுத்தலாம்; கோர்ட்டும் அவ்வாறே தீர்ப்பளிக்கலாம். ஆனால், அந்தச் சட்டத்தையும் தீர்ப்பையும் அமுலுக்குக் கொண்டுவர முடியுமா? அது முடியாமல் செய்யும் வழி தனக்குத் தெரியும்! தேச சேவிகையர் படையில் சேர்ந்து சிறை புகுந்துவிட்டால், சிறைக்குள்ளே வந்து தன்னைச் சட்டம் கட்டாயப்படுத்தாதல்லவா? "சிறைக்குள் சுதந்திரத்தைக் காணுங்கள்" என்று மகாத்மா காந்தி சொன்னது மற்றையோர் விஷயத்தில் உண்மையோ, என்னமோ, தன் விஷயத்தில் அது முற்றும் உண்மையாயிருக்கும் என்று அவள் உறுதி கொண்டாள். சட்டத்துக்கும் தீர்ப்புக்கும் கட்டுப்பட்டு, ஸ்ரீதரனுடன் கூடி வாழ்ந்தால் அதுதான் கொடிய சிறை வாழ்க்கை. இதற்கு மாறாக, தாய் நாட்டின் சுதந்திரத்துக்காகச் சிறை புகுந்தால், அந்தச் சிறை வாழ்க்கையே உண்மையான சுதந்திர வாழ்க்கையாகும். எனவே,

---

## கவிஞரைக் கண்டுபிடியுங்கள் - போட்டி முடிவு



**போட்டி**

ரொம்பக் கடுமை என்று விமர்சித்த வாசகர்கள் வாய்க்குச் சர்க்கரை! யாருமே எல்லா விடைகளையும் சரியாக எழுதவில்லை!

*சரியான விடைகள் :*

1. வைரமுத்து, 2. பாரதியார், 3. புதுமைப்பித்தன், 4. இளங்கோவடிகள், 5. ஔவையார், 6. பாரதிதாசன்.

ஆறு விடைகளுள் ஐந்தினைச் சரியாக எழுதி ரூ. 250/- பரிசு பெறுபவர் :

எஸ். ராஜகோபாலன், 'காவியம்', 5, நேதாஜி தெரு, ஸ்ரீனிவாச நகர், பெருங்களத்தூர் - 600 063.

---



"பீடி, சிகரெட் வியாபாரிகள் சங்கத்துல, அந்த மியூசிக் டைரக்டருக்குப் பாராட்டு விழா நடத்திப் பொன்னாடை போர்த்தப் போறாங்களாம்...!"

"எதுக்கு...?"

"தியேட்டர்ல அவர் மியூசிக் போட்ட காட்சி ஓடும் போதுதான் பீடி, சிகரெட் வியாபாரமே பிச்சுக் கிட்டுப் போகுதாம்!"

- சீர்காழி வி. ரேவதி

---

*'அடிமை வாழ்வில் ஆசை ஏனோ?*
*விடுதலை பெற எழுவாய்!'*

என்று தேச சேவிகையர் பாடிக் கொண்டு சென்றபோது, தன்னைப் பிரத்தியேகமாகக் குறிப்பிட்டு அவர்கள் அழைப்பதாகவே சாவித்திரிக்குத் தோன்றிற்று. அந்த அழைப்பை ஏற்று அவள் ஆரஞ்சு நிறக் கதர்ப் புடைவை உடுத்திக் கிளம்பிச் சென்றதைச் சென்ற அத்தியாயத்தில் கூறினோம்.

ஆனால், சாவித்திரி எதிர்பார்த்த நிர்ப்பந்த வாழ்க்கை உண்மையிலேயே அவளுக்கு வர இருந்ததா? கோர்ட்டுத் தீர்ப்பின்படி அவள் பிரியமில்லாத புருஷனுடன் கட்டாயமாகக் கூடி வாழ்ந்திருக்கும்படி நேரிட்டிருக்குமா?

இந்தக் கேள்விகளுக்குப் பதில் தெரிந்து கொள்ள நாம் பாரத விலாஸ் ஹோட்டலில் ஸ்ரீதரனுடைய அறைக்குப் போக வேண்டிய தாயிருக்கிறது.

ஸ்ரீதரன் அப்போது ஏதோ கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அந்தக் கடிதத்தை எழுதுவதில் அவனுக்கு ரொம்பவும் சிரமம் ஏற்படுகிறதென்பது நன்றாய்த் தெரிந்தது. அடிக்கடி எழுதுவதை நிறுத்திவிட்டு ஆகாயத்தைப் பார்ப்பதும், பெருமூச்சு விடுவதும், எழுந்திருந்து நடப்பதுமாயிருந்தான். அவனுக்குப் பக்கத்தில், கீழே, அநேக கடுதாசிகள் கசக்கப்பட்டுக் கிடந்தன. அவையெல்லாம், ஸ்ரீதரன் எழுத முயற்சித்து, அவனுக்குத் திருப்தியில்லாமல் அரைகுறையாக நிறுத்திக் கசக்கிப் போட்டவையேயாகும்.

இப்போது, மேஜைமீது வைத்திருந்த காகிதத்தில், "சாவித்திரி, உனக்கு நான் என்ன சொன்னால்தான் நீ நம்பப் போகிறாய்?... ஆனால், உனக்காக நான் இதை எழுதவில்லை. குழந்தை சாருவுக்காக எழுதுகிறேன். உங்களை விட்டுப் பிரிந்து போவதற்கு முன் குழந்தைக்கு ஒரு வார்த்தை சொல்லாமல் போக என் மனம் இடங்கொடுக்கவில்லை..." என்று எழுதியிருந்தது.

அச்சமயத்தில் ஸ்ரீதரனுடைய பழைய சிநேகிதன் நாணா (நாராயணன், பி. ஏ., பி. எல்.) அறைக்குள் வந்தான். ஸ்ரீதரனுடைய முதுகில் தட்டிக் கொடுத்து, "ஸ்ரீதரா! எப்போதும் நீ அதிர்ஷ்டக்காரன்டா!" என்றான்.

பிறகு, நாற்காலியில் உட்கார்ந்து, ஒரு சிகரெட்டு எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு சொன்னான் : "ஸ்ரீதரா! உன்னை நான் ரொம்ப 'தாங்க்' பண்ணணும். இந்தக் கேஸிலே நான் உனக்காக ஆஜரானதிலிருந்து என் பேர் பிரசித்தமாப் போச்சு. இந்த ஒரு வாரத்திலே எனக்கு ஆறு கேஸ் வந்திருக்கு. இரண்டு கிட்னாப்பிங் கேஸ்..."

அதற்குள் ஸ்ரீதரன் எரிச்சலுடன், "ரொம்ப சரி! இப்போ எங்கே வந்தே, அதைச் சொல்லித் தொலை!" என்றான்.

"என்ன ரொம்பக் கோபமாயிருக்கே, ஸ்ரீதரா? எங்கே வந்தேன்னு கேக்கறியே? நம்ம பக்கந்தான் கேஸ் ஜயிச்சுடுத்தேன்னு சும்மா இருக்கக் கூடாது, தெரியுமோ இல்லையோ? சூட்டோடு சூடா மேலே ஆக வேண்டியதுக்கு 'ஸ்டெப்ஸ்' எடுத்துக்கணும். நாளைக்கு ஒரு நோட்டீஸ் கொடுத்து வைக்கலாம்னு நெனைக்கிறேன்" என்றான் நாணா.

ஸ்ரீதரன் அப்போது ரௌத்ராகாரம் அடைந்தான் என்று சொல்ல வேண்டும். அவனுடைய கோபத்துக்குத் தகுந்த வார்த்தைகள் இங்கிலீஷ் வார்த்தைகளாகத்தான் வந்தன. "ஷட் அப், யு இடியட்! கெட் அவுட், கெட் அவுட்!" என்று கத்தினான். கத்திக் கொண்டே, நாணாவைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளி அறைக்கு வெளியே கொண்டு விட்டான். நாணா, "என்னடா இது? திடீர்னு பைத்தியம் பிடிச்சுடுத்தா என்ன?" என்று சொல்லிக் கொண்டே மாடிப் படியில் வேகமாக இறங்கிச் சென்றான்.

(தொடரும்)




# பிரியங்கா

இந்தி 'தாமினி'யின் ரீமேக் என்றார்கள். கதாசிரியருக்கு எல்லா நலன்களும் சேர இறைவனைப் பிரார்த்திப்போம். கதை அவ்வளவு கெட்டி.

வேண்டா மருமகளாக நுழையும் ரேவதி. அங்கே கணவனின் தம்பி, நண்பர்களோடு வேலைக்காரப் பெண்ணைப் பலாத்காரப் படுத்துவதைப் பார்த்து விடுகிறார். தம்பியைக் காப்பாற்ற குடும்பம் எந்த எல்லைக்கும் போகிறது. எதிர்த்து உண்மையின் பக்கம் நிற்கும் ரேவதிக்குப் பைத்தியம் என்ற பட்டம், மனநல மருத்துவமனையில் கொலை முயற்சி என்று விறுவிறுப்பான சம்பவக் கோர்வை.

உயிரைக் கொடுத்திருக்கிறார் ரேவதி. தத்ரூபமான நடிப்பு. உண்மை பேச முடியாத சூழ்நிலையில் அவரின் தவிப்பு எதார்த்தம். கோர்ட் குறுக்கு விசாரணையின்போது அருவருப்பு, பின்னர் பயம் என மாறிமாறி முகம் உணர்ச்சி கொப்பளிக்கிறது. ஹாட்ஸ் ஆப் டு ரேவதி.

முதல் பாதி ஜெயராம், இரண்டாவதில் பிரபு. மலையாளத் தமிழில் ஜெயராம் சம்சாரிக்கிறார். பாச, உணர்ச்சிப் போராட்டங்களில் மனுஷன் பொங்குகிறார். பிரபுவுக்கு சம்ரட்சகர் ரோல். சிரமேற்கொண்டு செவ்வனே நிறைவேற்றியிருக்கிறார்.

சந்தோஷத்துக்கு ஒரு பாட்டு, சோகத்துக்கு ஒரு பாட்டு, வீரத்துக்கு ஒரு பாட்டு என்று இம்சிக்க வில்லை. உள்ளது வரை தேன் மழை. காதல் பாட்டில், எடிட்டர்கள் ஜொலிக்கிறார்கள். வித்தியாசமான ஷாட் கம்போஸிஷன்.

குறைகள் இல்லையா என்றால் ஆங்காங்கே கொஞ்சம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் கதையை மட்டும் நம்பி படம் எடுத்திருப்பதைப் பார்க்க, கைகுலுக்கவே தோன்றுகிறது.

- துளசி



## ஒரு நிலையான தொழிலில் எந்த நிறுவனம் உறுதியாக

உங்கள் பணத்தை ஒரு நிதி நிறுவனத்தில் டெபாசிட் செய்யும் போது நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? அதன் மூலம் ஒரு நிலையான வருமானத்தைப் பெற வேண்டும்; பொருளாதார மாற்றங்கள் அந்த வருமானத்தைப் பாதிக்கக் கூடாது... என்பதுதானே! அந்த வகையில், நீங்கள் டெபாசிட் செய்ய மிகவும் ஏற்ற நிறுவனம் ஸ்ரீராம்தான். காரணம்—

நாட்டின் பொருளாதாரத்துக்கு இன்றியமையாத அடிப்படைச் சேவையில் ஈடுபட்டிருப்பவை லாரிகள். அந்த லாரிகளுக்கு நிதியுதவி அளிக்கும் ஒரு நிலையான தொழிலில் ஸ்ரீராம் ஈடுபட்டுள்ளது. தவிர, லாரிகளைத் தயாரிக்கும் டெல்கோ, அசோக் லேலண்ட் நிறுவனங்களும் ஸ்ரீராம் நிறுவனங்களில் முதலீடு செய்துள்ளன. லாரிப் போக்குவரத்து ரொக்க அடிப்படையில் நடைபெறும் தொழில். உரிமையாளருக்கு ஒவ்வொரு நிமிடமும் வருமானத்தை ஈட்டித் தரும் சாதனமாக லாரி விளங்குகிறது. எனவே, லாரி உரிமையாளரால் தவணைத் தொகைகளை ஒழுங்காகச் செலுத்திவிட முடிகிறது. அப்படி அவரால் செலுத்த முடியவில்லையா? அந்த லாரியைக் கையகப்படுத்தி விற்பனை செய்து கடனை எளிதில் வசூலித்து விட முடியும்.

**இதர நிதி நிறுவனங்கள் வெகுவாக ஈடுபட்டிருக்கும் பில் டிஸ்கவுன்டிங் எனும் கடனுதவி முறையை இதே அளவு நிலையான தொழிலாகக் கருத முடியாதா?**

நிச்சயமாக முடியாது. பில் டிஸ்கவுன்டிங் ஒரு குறுகிய கால வர்த்தகம். நிதியுதவி முழுவதையும் 3 மாதங்களுக்கு ஒரு முறை வெவ்வேறு இனங்களின் மீது மாற்ற வேண்டியது அவசியம். அதுவும், அவ்வப்போது நடப்பில் உள்ள வட்டி விகிதத்தில் அளிக்கும் நிதியுதவியைத் திரும்பப் பெற முடியாத போது, எந்தச் சொத்தையும் கையகப்படுத்துவதும்

*பணத்தின் அருமை தெரிந்தவர்கள் நாங்கள். அதைவிட,*

என் நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்...

## ஈடுபட்டிருக்கிறதோ, அதுவே.

எளிதல்ல. நிலையான தொழில் என்று பார்க்கும்போது, சமூகத்துக்கு இன்றியமையாத சேவையை எப்போதும் செய்து கொண்டிருக்கும் லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பது உயர்வானது.

**ஸ்ரீராம் – லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் முன்னணி நிறுவனம்**

ஸ்ரீராமின் பின்பலமாக இருப்பவை — ரூ.500 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். ரூ.170 கோடிக்கும் கூடுதலாகவுள்ள வலுவான டெபாசிட் ஆதாரம். உங்களுக்கு மிகச் சிறந்த சேவையை அளிப்பதற்கு வசதியாக நாடு முழுவதும் 65 அலுவலகங்கள். உங்களுடைய தேவைகளையும் அக்கறைகளையும் புரிந்து கொண்டு அவற்றை உண்மையான ஈடுபாட்டுடன் நிறைவேற்றும் ஸ்ரீராமின் பண்பாடு.

இன்று 1,50,000 டெபாசிட்தாரர்கள் ஸ்ரீராமைத் தங்கள் சொந்த நிதி நிறுவனமாக நம்புகிறார்கள். அது உங்களுடையதாகவும் இருக்க வேண்டாமா?

For statutory details refer to our advt. in The Hindu dated 9/7/93




ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்
ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்
ஸ்ரீராம் சிடி யூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்

இப்போது டெல்கோ, அசோக் லேலண்ட், சிடி யூனியன் வங்கி ஆகிய நிறுவனங்களின் ஈக்விடி பங்கேற்புடன்.

நிர்வாக அலுவலகம்: மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 4 லேடி தேசிகா ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004. போன்: 4991363, 4990960.4993968.

டெபாசிட்டுகள்
திரட்டும்
கேம்பெய்ன்
இப்போது

உங்கள் அக்கறைகளையும் உணர்ந்தவர்கள்.

அமெரிக்காவே அல்லோல கல்லோலப் படுகிறது! 64 வருட காத்திருத்தலுக்குப் பிறகு உலகக் கோப்பைக் கால்பந்துப் போட்டி இங்கே நடைபெறப் போகிறது.

பந்தயத்தை நடத்தும் பொறுப்பை அமெரிக்காவுக்குக் கொடுக்கும் முன் FIFA (Federation Internationale de Football Association) ஆயிரம் முறை யோசித்தது. காரணம், கால்பந்து அப்படியொன்றும் அமெரிக்கர்கள் நேசிக்கும் ஆட்டம் இல்லை. உலகெல்லாம் ஃபுட்பால் என்றழைக்கும் ஓர் ஆட்டத்தை 'சாக்கர்' என்றே அமெரிக்கர்கள் மாற்றுப் பெயரிட்டுச் சொல்கிறார்கள். இருப்பினும், '84இல் ஒலிம்பிக் கால் பந்து பந்தயத்தை லாஸ் ஏன்ஜல்ஸில் சிறப்பாக நடத்திக் காட்டிய போது 1,03,000 அமெரிக்கர்கள் ஆர்வமிக்க பார்வையாளர்களாக இருந்தார்கள். இங்கே கால் பந்தாட்டம் நடத்தினால் போணியாகும் என்பதை உலக ஃபுட்பால் ஃபெடரேஷன் உணர்ந்தது. அமெரிக்க அதிபர் ரேகனே '87 இல் FIFA தலைவரை நேரில் சந்தித்து உலகக் கோப்பைப் போட்டிகளை நடத்த வாய்ப்புக் கேட்டார்.



• போட்டியின் வெற்றி சின்னம்






# உங்கள் டி.வி.யில் காணத் தவறாதீர்:

# உலகக் கோப்பை 'சாக்கர்' பெ

அமெரிக்க நாடாளுமன்றம் வாய்ப்புக் கோரி தீர்மானமே நிறைவேற்றியது! இத்தனைக்கும் பிறகே FIFA 1988 இல் அமெரிக்காவுக்குப் பச்சை கொடி காட்டியது.

**சு**மார் நாநூறு மில்லியன் டாலர் செலவழித்து அமெரிக்கா நடத்த விருக்கும் இந்தப் பந்தயத்தை, கோககோலா, ஜில்லட், ஃபிலிப்ஸ், மாஸ்டர் கார்ட், கேனன், ஃபியூஜி, ஜெனரல் மோடர்ஸ், மக் டோனல்ட், அடிடாஸ், ஷெராடன் ஹோட்டல்ஸ் போன்ற பிரபல நிறுவனங்கள் ஸ்பான்ஸர் செய்யப் போகின்றன.

ஜூன் 17 முதல் ஜூலை 17 வரை நடைபெறவுள்ள போட்டிகளில் 24 அணிகள் பங்கேற்கவுள்ளன. பந்தயத்துக்கு ஒன்பது மைதானங்களை




...க்ரோஷம் காட்டும்
...மெரிக்க வீரர்கள்

# ...ாட்டி!

● முதல் உலகக் கால்பந்து போட்டி 1930ல் உருகுவே நாட்டில் நடந்தது. அந்த நாடே வெற்றிக் கோப்பையையும் தட்டிச் சென்றது. அதன்பின் நான்கு வருடங்களுக்கொருமுறை உலகக் கால்பந்து தொடர்ந்து நடந்து வருகிறது.

● உலகக் கால்பந்து சங்கத்தில் 165 நாடுகள் உறுப்பினர்களாக உள்ளன. ஆனால் இந்த முறை போட்டியில் கலந்து கொள்ளத் தகுதி படைத்த நாடுகள் 24 தான். கடந்த இரண்டு வருடங்களாக, நடந்த தகுதிப் போட்டிகளில் ஆசியா கண்டத்தில் சவுதி அரேபியாவும், தென் கொரியாவும் மட்டுமே வெற்றி பெற்றன. ஹங்கேரி, ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, டென்மார்க் போன்ற சிறந்த அணிகள் கூட, தகுதிப் போட்டிகளில் தோல்வியடைந்தது குறிப்பிடத்தக்கது. இந்தியா...? பூட்டகேஸ்தான்!

● சிறந்த கால்பந்து வீரர்களில் பீலேக்கு அடுத்தபடியாக கருதப்படுபவர் அர்ஜென்டைனாவின் மரடோனா. மனிதர் முழு ஜோரில் இருக்கிறாராம். 'வீரர்கள், தங்கள் மனைவிகளையும் செலவின்றி உடன் அழைத்துப் போக அனுமதியுங்கள்' என்று இவர் அனுமதி கேட்டிருக்கிறார்!



● தங்களது ஆடைகளில், விளம்பர வாசகங்களை எழுதி சம்பாதிக்கலாம் என்ற மெக்ஸிகோ வீரர்களின் ஆசையில் தார் பூசப்பட்டது. உலக கால்பந்து சங்கம் ஆடைகளில் விளம்பரங்களைத் தடை செய்து

# ஆடாத அணிக்கு ஆறுதல் பரிசு!

அமெரிக்கா தயார் செய்து வைத்துள்ளது. அவற்றுள் ஒன்று இன்டோர் ஸ்டேடியம். (முதன் முறையாக ஓர் இன்டோர் ஸ்டேடியத்தில் உலகக் கோப்பை ஆட்டங்கள் நடைபெறும் என்பது குறிப்பிடத்தக்கது). மிசிகனில் உள்ள இந்த ஸ்டேடியத்தில் 'ப்ளூ கிராஸ்' என்ற ஒரு வகைப் புல்லை கஷ்டப்பட்டு வளர்த்திருக்கிறார்கள். மிசிகன் ஸ்டேட் பல்கலைக் கழகம் இரண்டு மில்லியன் டாலர் செலவில் ஆராய்ச்சி செய்து உருவாக்கிய புல் ரகம் இது! ஒலிம்பிக் ஃபுட்பால் பந்தயங்கள் நடந்த 'ரோஜா கிண்ணம்' (Rose Bowl) மைதானத்தில் தான் ஓர் அரையிறுதிப் பந்தயமும் பின்னர் இறுதிப் பந்தயமும் நடக்க உள்ளன.



'ரோஜா கிண்ணம்' லாஸ் ஆன்ஜல்ஸ் பகுதியைச் சேர்ந்த பாஸடீனா நகரில் உள்ளது. இந் நகரமே பந்தயத்துக்

விட்டது!

● எந்தப் போட்டியிலும் கலந்து கொள்ளாவிடினும், ஜாம்பிய அணிக்கு ஒரு ஆறுதல் பரிசு கொடுக்கத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. காரணம், சோகமயமானது. 1993-ல், உலகக் கோப்பைக்காகத் தயார் செய்யப்பட்ட ஜாம்பிய அணி வீரர்கள் அனைவரும் விமான விபத்தில் மரணமடைந்து விட்டனர். அந்த வேதனையையும் தாங்கிக் கொண்டு தகுதிப் போட்டிகளில் விளையாட, புதிய அணி ஒன்றை உருவாக்கியது ஜாம்பியா. ஆனால் வெற்றி பெறவில்லை. இருந்தாலும் அந்த நாட்டுக்குக் கால்பந்து மீதுள்ள ஆர்வத்தைப் பாராட்டத்தான் இந்தப் பரிசு.

● இந்த முறை நடுவர்களின் பணி 'தாவு தீர்ந்து விடும்' என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஒரு வீரர் பந்தைத் தட்டிக் கொண்டு முன்னேறும்போது பின்னாலிருந்து தட்டிப் பறிப்பது அழுகுணி ஆட்டம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறதாம். இதனால் ரெட் கார்ட், அடிக்கடி காண்பிக்க வேண்டியிருக்குமாம்.

● உலகக் கோப்பை யாருக்கு? 100 விளையாட்டு பத்திரிகையாளர்களிடம் (sports journalists) ஒரு கருத்துக் கணிப்பு நடத்தப்பட்டது. 52 பேர் பிரேஸில் தான் சாம்பியனாக வரும் என்று சொல்லியிருக்கிறார்கள். 27 பேர் இத்தாலி என்றும் 11 பேர் ஜெர்மனி என்றும் ஊகித்திருக்கிறார்கள்.

● பிரேஸில் வீரர்கள் இப்போதே வெற்றி மிதப்பில் இருப்பதால்தானோ என்னவோ தங்கள் நாட்டிலிருந்து விமானம் ஏறும் போதே 'அது சரியில்லை, இது சரியில்லை' என்று தகராறு செய்தார்கள். பிரேசிலின் சிறந்த வீரரான ரமாரியோ, தனக்கு ஜன்னல் ஓரமாக ஸீட் ஒதுக்கவில்லை என்பதற்காகக் கூட கலாட்டா பண்ணியிருக்கிறார்!

- ஸ்ரீநிவாசன்

காக விழாக் கோலம் தரித்திருக்கிறது. சான் கேப்ரியல் மலை அடிவாரத்தில் அமைந்துள்ள நகரின் அழகும் அதன் அருங்காட்சியகங்களும், உணவகங்களும், நடன கிளப்புகளும் கூடுதல் ஈர்ப்பை ஏற்படுத்தும்.

பயங்கரவாதம் உலகெங்கும் பெருகிவிட்ட நிலையில் பாதுகாப்பு ஏற்பாடுகளின் பக்கம் சிறப்புக் கவனம் செலுத்தியுள்ளார்கள். ஃபுட்பால் ரசிகர்களின் வெறியை வேறு சமாளித்தாக வேண்டும்! ஜனநாயக அமைப்புக்கும் அதீத சுதந்திரத்துக்கும் பழகிப் போன அமெரிக்கர்களோ கும்பல் கும்பலாக போலீசும் ராணுவமும் நின்றால் வெறுத்துப் போவார்கள். உள்ளூர்க்காரர்களுக்கு எரிச்சல் ஊட்டாமல் வந்த விருந்தினருக்குப் பாதுகாப்பளிப்பது மிகப் பெரிய சவால். இந்த ஆண்டின் தொடக்கம் முதலே அமெரிக்க பாதுகாப்புத்துறை அதிகாரிகள் உலகப் பாதுகாப்பு அமைப்புகளுடன் தொடர்பு கொண்டு வன்முறையில் ஈடுபட்டு தண்டிக்கப்பட்ட ஃபுட்பால் வெறியர்களை இனம் கண்டுகொண்டிருக்கிறார்கள். இத்தகையவர்களை அமெரிக்க எல்லைக்குள் அனுமதிக்காமல் வெகு முன்ஜாக்கிரதையுடன் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

பந்தயத்துக்கான சின்னத்தை வடிவமைக்க 1990-லேயே ஒரு போட்டி அறிவித்தது World Cup USA '94 அமைப்பு. பென்டாகிராம் டிசைன் நிறுவனம் அமெரிக்க தேசியக் கொடியை உள்ளடக்கிய ஒரு சின்னத்தை வடிவமைத்து, பரிசைத் தட்டிக் கொண்டது. வார்னர் பிரதர்ஸ் நிறுவனம் இப் பந்தயத்துக்காக உருவாக்கிய ஃபுட்பால் நாய்க் குட்டிக்கு நாடு முழுதும் வாக்கெடுப்பு நடத்தி 'ஸ்ட்ரைகர்' எனப் பெயரிட்டுள்ளார்கள்.

பந்தயங்களை எல்லாம் டெலிவிஷனில் காட்டுவார்கள் என்பது தெரிந்த விஷயம். ஆனால் இடையிடையே எரிச்சலூட்டும் விளம்பரங்கள் வந்து நகத்தையோ பல்லையோ கடிக்க வைக்காது என்பது வரவேற்கத்தக்க புதுச் செய்தி.

- நன்றி : ஸ்பான்

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

அப்பாவே வருகிறார் என்று தந்தியைக் காட்டியதில்தான் நான் அந்த வீட்டுக்குத் திரும்பிச் சென்றேன். கொஞ்சம் கூட இஷ்டமில்லாமல்தான் அவர்களையெல்லாம் வெற்றுப் பார்வை பார்த்து என் அறைக்குள் சென்றேன். அர்ஜுன், "நாம கொஞ்சம் பேசலாமா ரேகா?" என்ற போது, அவர் முகத்தில் கதவைச் சார்த்தினேன்.

கதவின் மறுபுறத்திலிருந்து "இப்ப என்ன ஆய்டுத்துன்னு இத்தனை கோபம்?"

"என்ன ஆகலை?"

"எனக்கு ஒரு சான்ஸ் கொடேன். எல்லாத்தையும் சரியா உன்கிட்ட சொல்றதுக்கு!"

"பொய் சொல்லீங்க! அந்தப் பொய்யை மறைக்க அதைவிடப் பெரிய பொய் சொல்லீங்க."

"நான் இதுவரைக்கும் எத்தனை பொய் சொல்லிருக்கேன் உன்னிடம்?"

நான் சட்டென்று கதவைத் திறந்து, "உள்ளே வாங்க! உக்காருங்க. நீங்க சொன்ன பொய்யெல்லாம் ஒவ்வொண்ணா சொல்றேன். நம்ம கல்யாணமே பொய்யிலதான் ஆரம்பிச்சது! பாங்க்ல வேலை பார்க்கறேன்னு சொன்னீங்க."

"பாங்க் இல்லை. சொந்த பிஸினஸ். அதனால என்ன?"

"சொந்த பிஸினஸ்னா எங்கப்பா கல்யாணத்துக்கே சம்மதிச்சிருக்க மாட்டார்."

"........."

"அதுக்கப்புறம் சிகரெட் பழக்கம், குடிப்பழக்கம் எதும் கிடையாதுன்னு பொய்! ஹனிமூன்ல ஏரோப்ளேன்லயே சீட்டு ஆட்டம். பெண்டாட்டிகிட்டேயே காசு வெச்சு! இது ஒரு பழக்கமான்னு கேட்டேன். சும்மா ஜாலிக்குன்னீங்க! அன்னிக்கு பஸ் ஸ்டாண்டில ஒருத்தன் கதறக் கதற, அவன்கிட்ட உள்ள காசை எல்லாம் சீட்டாடிப் பிடுங்கிக் கொண்டு...

"நீங்க நிஜமாகவே சீட்டை நிறுத்திட்டீங்களா! 35 லட்சம் பண்ணதும் போதும், நிறுத்திர்றதா சொன்னீங்க! இப்ப ஒரு கோடி!

"பம்பாய் போறதா சொல்லி ஓட்டல் ரூம்ல ரஞ்சனியோட படுத்துக் கொண்டு இருக்கீங்க. கேட்டா ஆபீஸ் விஷயம் பேசினோம்னு சொல்லீங்க - அப்படித் தானே? நீங்க யாரு, உங்களுக்கு நான் யாரு, உங்களுக்கு லைஃப்ல பணம் பண்றதைத் தவிர வேற ஏதாவது குறிக்கோள் உண்டா! ஏதாவது ஒரு புஸ்தகம் படிப்பீங்களா? பிஸினஸ் இண்டியாவைத் தவிர, வேற ஒரு பத்திரிகை? கோயிலுக்குப் போனாக் கூட ஒரு சான்ஸ் கிடைச்சா சூதாடணும்..."

"கோவில் இல்லை, மைலாப்பூர் புடைவைக் கடைக்கு" என்று சிரித்தார் அர்ஜுன்.

எனக்கு வந்த ஆத்திரத்தில் அவர் மண்டையைப் பிடித்து அப்படியே சுவற்றில் நெத்தலாம் என்று தோன்றியது.

"சரி, நீ எல்லாம் சொல்லிட்டே! என் ப்ராப்ளம் புரிஞ்சு போச்சு. எல்லாத்தையும் நேர்படுத்திடலாம். நோ ப்ராப்ளம்! ரிலாக்ஸ்! அப்புறம் பேசலாம். ஆனா, ஃபார் காட் ஸேக் கடற்கரையில் செய்த பாரு, அது மட்டும் வேண்டாம்! நோ! உன்னை விட்டுட்டு என்னால இருக்க முடியாது" என்ற போது அவர் கண்களில் கண்ணீரை முதல் தடவையாகப் பார்த்தேன். இது கூட அவர் பொய் ஆயுதங்களில் ஒன்று என்றுதான் தோன்றியது. நான் மனம் மாறவில்லை. ஓட்டல் அறையில் பார்த்த காட்சி உறுத்திக் கொண்டே இருந்தது. அந்தப் பெண் படுக்கையிலிருந்து, அவரைக் கூப்பிட்ட குரலில் இருந்த சுவாதீனத்தில் மூன்று வருஷ பரிச்சயமாவது தெரிந்தது.

சீதா என்னை வந்து பார்த்தாள். சீதாவிடம் நடந்ததைச் சொல்லுமுன்,

சுஜாதா

## ''ஒரு விதத்தில ஜெயில்தான். சிம்பிள் இம்பிரிஸன்மெண்ட். ஒரே ஒரு வாரத்துக்கு!''

"கேள்விப்பட்டேன் அதைப் பத்தி. கொஞ்ச நான் நினைக்காதே" என்றாள்.

"எப்படி கீதா நினைக்காமல் இருக்க முடியும்! என்கிட்ட என்ன குறை? எதுக்காக அந்த, அந்த... அதைப் பார்த்திருக்கியோ நீ?"

"ம்..."

"உங்க எல்லாருக்கும் முன்னமேயே தெரியும் இல்லை?"

கீதா மௌனமாக இருக்க,

"இதில நான் ஒருத்திதான் ஏமாளி அவருடைய அப்பா, அம்மாவுக்கும் தெரியும். காயத்ரிக்கும் தெரியும். இது எந்த ஊர் நியாயம்! எந்தவிதத்தில் நியாயம்!"

கீதா, "நான் உனக்கு எந்த சமாதானம் சொன்னாலும் சரியா வராது ரேகா! ரிலாக்ஸ்! வேற எதையாவது யோசிச்சுப் பாரு! கோடைக்கானல் போகலாமா? ஏற்பாடு செய்யட்டுமா?"

"தனியாவா?"

"நான் வரேன்... இல்லை அர்ஜுன்?"

"வேண்டாம்" என்று அலறினேன்.

"என்னைக்காவது ஒருநாள் அவரை நீ மன்னிச்சுத்தானே ஆகணும்?"

"எதுக்காக மன்னிக்கணும்?"

"பின்ன என்ன பண்றதா உத்தேசம்?"

"எங்க அப்பா வரப் போறார். அவரைக் கேக்கணும்."

"உங்க அப்பா வரப் போறாரா? எனக்குத் தெரியாதே?"

"அர்ஜுன் தந்தியைக் காட்டலை?"

"தந்தியா? போன் பண்ணியிருக்கலாமே?"

எனக்கு முதல் முறையாக சந்தேகம் வந்தது. என்னை ஊருக்குப் போக விடாமல் செய்ய தயாரிக்கப்பட்ட தந்தியா!

அர்ஜுன் என்னை மாலை அழைத்துப் போக வந்த போது கேட்டேன், "இது கூட உங்க நூறு பொய்களிலே ஒண்ணா?"

அவர் அடிபட்டது போல் என்னைப் பார்த்து, "வீட்டுக்குப் போன உடனே உங்க அப்பா கூடப் பேசி கன்ஃபார்ம் பண்ணிக்க ரேகா. நான் அவ்வளவு பொய்யனில்லை!"

வீட்டுக்கு வந்த போது மாமனாரும் மாமியாரும் வரவேற்று சகஜமாகவே எதுவுமே நடக்கவில்லை போலப் பேசினார்கள்.

"வாம்மா! ஒரு குடும்பம்னா நல்லது கெட்டது இரண்டும்தான் இருக்கும்" என்று வரட்டு வேதாந்தம் பேசினார்கள். நான் வீட்டுக்கு வந்தவுடன் அப்பாவுக்கு போன் பேச நினைத்து, எஸ்.டி.டி. போட்டுப் பார்த்தேன். திரும்பத் திரும்ப, "இந்த வசதி இந்த நம்பரில் தரப்படவில்லை" என்கிற முன் பதிவுச் செய்திதான் கேட்டது. நான் வெளியே கிளம்புவதற்காக செருப்பை மாட்டிக் கொண்டு, "அம்மா நான் டில்லிக்கு போன் பண்ணணும்" என்றேன்.

"தாராளமா பண்ணிக்கோ."

"நம்ம போன்ல எஸ்.டி.டி. பண்ண முடியலை. எனக்குப் பணம் கொடுத்தா நான் பக்கத்தில போய் செய்துக்கறேன்."

"பணம் எல்லாம் அர்ஜுன் அலமாரில மேல் டிராயர்ல வெச்சிருப்பான்."

"அங்க இல்லை. அதனாலதானே நான் உங்களைக் கேட்கிறேன்."

"என்கிட்ட ஏதும்மா பணம்?"

"அப்பாகிட்ட?" என்று மாமனாரிடம் கேட்கச் சென்ற போது, "பத்து ரூபா இருக்கு. போதுமா? ஒரு செக் வேணா எழுதித் தரேன்" என்றார்.

எனக்கு கடுப்பாகிப் போய் போனை எடுத்து அர்ஜுனைக் கூப்பிட்டேன். அவர் மீட்டிங்கில் இருப்பதாக கீதா சொன்னாள்.

"கீதா, கேவலம் ஒரு போன் பண்ண முடியலை டில்லிக்கு! எஸ்.டி.டியை கட் பண்ணி வெச்சிருக்கு."

"டிரங்க்கால் புக் பண்ணிப் பாரேன். ஒண்ணு செய்யறேன். நானே உங்க அப்பாவுக்கு போன் செய்து உடனே உன்கிட்ட பேசச் சொல்றேன்..."

**சா**யங்காலம் வரை எதும் போன் வரவில்லை. மீண்டும் கீதாவுக்கு போன் போட்டுக் கேட்ட போது டில்லியில் வீட்டில் ரிங் அடிக்கிறதாம், யாரும் எடுக்கவில்லையாம். "ஒரு வேளை கிளம்பி விட்டார்களோ என்னவோ!"

நான் பித்துப் பிடித்தது போல உட்கார்ந்தேன். வெளியில் எங்கும் போகலாம் என்றால் கையில் ஒத்தைக் காசு இல்லை. எந்த மேசையைத் திறந்தாலும் முன்பெல்லாம் கண்ட கண்ட இடங்களில் காசு கிடக்கும். இப்போது காசு என்பதே இல்லை. அர்ஜுன்



ராத்திரி வந்த போது. "எனக்கு போன் பண்ணணும், காசு வேணும்."

"போன்தான் இருக்கிறதே. அதற்கு காசு எதற்கு?"

"இந்த போனில் இல்லை. வெளி போனில். இதில் கனெக்ஷன் கிடைப்பதில்லை."

"யார் சொன்னது?" என்று போனை எடுத்துப் பார்த்து, "டயல் டோன் இருக்கே!"

எனக்கு சட்டென்று உதயமாயிற்று. இது ஒரு விளையாட்டு. என்னை இந்த வீட்டை விட்டு நகராமல் செய்ய, காசில்லாமல் அடித்து சிறைப்படுத்த ஏற்படுத்திய யுக்தி.

நான் விடாமல் எப்படியாவது கை வளையலை விற்றாவது போன் செய்யலாம் என்று புறப்பட்டேன்.

"எங்கே?" என்றார்.

நான் பதில் சொல்லாமல் செருப்பை மாட்டிக் கொண்டு புறப்பட்டேன். வாசல் கதவு தாளிட்டிருந்தது. அங்கிருந்தே "சாவி வேணும்!" என்றேன்.

"எங்க போறே சொல்லு?"

"சொன்னேனில்லையா!"

"எல்லாம் நாளைக்கு போன் செய்துக்கலாம். வா, வந்து படு!"

எனக்கு வந்த ஆத்திரத்தில், "சன்னல் கதவைத் திறந்து வெளியே குதிப்பேன்!"

சிரித்து விட்டு, சும்மா இருந்தார்.

"அம்மா, அப்பா எங்கே அவங்க?" என்று மாமியாரையும் மாமனாரையும் தேடிச் சென்றேன். அறை காலியாக இருந்தது.

"சொல்ல மறந்துட்டேனே! அவாளை வேற ஃப்ளாட்டுக்கு ஷிப்ட் பண்ணிட்டேன். உனக்கு நிம்மதியும் தனிமையும் வேணும். அவா இருந்தா நீ ரொம்ப இர்ரிட்டேட் ஆயிடறே! அதனால உனக்கு நல்லதுக்கு..."

"என்ன இது ஜெயிலா?"

"ஒருவிதத்தில் சரிதான். ஸிம்பிள் இப்ரஸெண்மெண்ட். ஒரே ஒரு வாரத்துக்கு. டாக்டர் யோசனைப்படிதான். ஏற்கெனவே ஒரு தடவை தற்கொலை முயற்சி பண்ணிட்ட இல்லையா?"

நான் திகைத்துப் போய் படுக்கையில் உட்கார்ந்தேன். மண்டையைப் பிடித்துக் கொண்டு, திங்க்! யோசி, சிந்தி - இந்த மாதிரி சமயத்தில் சும்மா கடுப்படித்து கத்துவதை விட சமயோசிதத்தால் வெல்ல வேண்டும். அப்படி ஒரு முழு ஆசாமியை சிறை போல் ஒரு வீட்டில் அடைத்து வைக்க முடியாது. அதுவும் ஃப்ளாட். பக்கத்து வீடுகள், சன்னல்கள் எத்தனை இருக்கின்றன?

படுக்கை அறைக்குள் வந்து உட்கார்ந்து கடிதம் எழுத பேப்பர் தேடினேன். அறையில் ஒரு காகிதம் இல்லை. ஒரு பென்சில் இல்லை. எனக்குச் சிரிப்பாகக் கூட இருந்தது. ஏதோ ஒரு நாவலில் படித்தது போல், ஒரு செய்தித்தாளில் அல்லது குப்பைக் காகிதத்தில் புருவப் பென்சிலால் "என்னைக் காப்பாற்றுங்க!" என்று எழுதி சன்னல் வழியாக தெருவில் விட்டெறிய, யாராவது ஒரு இளைஞன் - வசந்தோ கணேஷோ வந்து காப்பாற்றப் போகிறானா? என்ன ஒரு விந்தை! இந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதியில், நாகரிகத்தின் உச்ச கட்டத்தில் இப்படி ஒரு சிறைச்சாலையா?

காசின்றி, தொடர்பின்றி, பேச ஆட்களின்றி, இரண்டு முறை அர்ஜுன் அறையின் கதவைத் தட்டினேன். பதில் இல்லை. எரிச்சலுடன் வந்து படுத்தேன். தூங்கி விட்டேன்.

**கா**லை எழுந்த போது மணி ஏழரை இருக்கும். அர்ஜுன் அறையில் இல்லை. சமையலறையில் காப்பி போட்டு வைத்திருந்தது. "ஃப்ரிஜ்ஜில் பால், தயிர், காய்கறிகள் உள்ளன. பசித்தால் சமைத்துக் கொள்ளவும்" என்று ஒரு குறிப்பு எழுதி விட்டுச் சென்றிருந்தார். வாசல் கதவு வழக்கம் போல் பூட்டியிருந்தது. செய்வதறியாது திகைப்புடன், பிரமிப்புடன் கைகளைப் பிசைந்து கொண்டு சன்னல் வழியாக யாராவது போகிறார்களா என்று எட்டிப் பார்த்தேன். வேலைக்காரியைக் கூப்பிட்டு வெளியே பூட்டு எப்படி இருக்கிறது என்று கேட்டுப் பார்த்தேன். "பெரிய பூட்டும்மா! யாரும்மா பூட்டிட்டாங்க?"

"எம்புருசன்!"

"சும்மாவா உட்டே? நானாருந்தா செவுட்ல ரண்டு அறை வுட மாட்டேன். இப்ப இன்னாங்கறே? உள்ளாற வேற சாவி இருக்குதா பாரு?"

அட இது எனக்குத் தோன்றவில்லையே? முன்னே பின்னே வீட்டுக்குள் அடைத்துப் பூட்டப்பட்ட அனுபவம் இல்லையே! அலமாரியில் தேடிப் பார்த்ததில் டூப்ளிகேட் சாவிக் கொத்து இருந்தது. அதைக் வேலைக்காரியிடம் கொடுக்க,

காலை பதினோரு மணிக்கு கதவு திறக்கும் சப்தம் எனக்கு தேவகானமாக இருந்தது. வாயிற் பக்கம் வந்த போது அந்தப் பெண் நின்று கொண்டிருந்தாள்.

"எம் பேரு ரஞ்சனி" என்றாள்.

(தொடரும்)

"ஏன்டா தம்பியை அடிக்கிறே?"

"போலீஸ் திருடன் விளையாட்டு விளையாடறோம். மாமூல் கொடுக்காம டபாய்க்கிறாம்ப்பா!"

- பிரபு

■ சரத் பத்வாகர் குல்கர்னி ஒரு வங்கி அதிகாரி. அவருடைய மனைவி சஞ்சத். கணவரின் உயரம் ஏழு அடி இரண்டு அங்குலம். மனைவியின் உயரம் ஆறு அடி மூன்று அங்குலம். இந்த தம்பதிதான், இந்தியாவின் மிக உயரமான தம்பதி என்ற பெருமைக்குரியவர்கள்.

■ லக்னோவில் இருக்கிறது ரெட்ஹில்ஸ் பள்ளிக்கூடம். இதற்கு என்ன சிறப்பு தெரியுமா? 1991-92ல், கின்டர் கார்டன் பிரிவில் மிக அதிக எண்ணிக்கையில் - ஆறு ஜோடி இரட்டையர்கள் படித்தார்கள்.

■ முதலமைச்சர் பொறுப்பில் இருக்கும் போது, திருமணம் செய்து கொண்ட அரசியல்வாதி யார் தெரியுமா? அஸ்ஸாம் முதல்வராயிருந்த பிரபுல்ல குமார் மகந்தா. 1988-ல், கௌஹாத்தி கல்லூரியில், விரிவுரையாளராய் இருந்த ஜெயஸ்ரீ கோஸ்வாமியை காதலித்து மணந்து கொண்டார்.

■ பல்வேறு விஷயங்கள் குறித்தும், பல பத்திரிகைகளுக்கு 'ஆசிரியருக்குக் கடிதம்' எழுதிய சாதனையாளர் 60 வயது அந்தோணி பரகல். 37 ஆயிரம் கடிதங்கள், பிரசுரமாகியுள்ளன. இவரை 'டைம்' பத்திரிகை பாராட்டி எழுதியது.

■ 1982 - 83 ல், டெல்லியில் "மாதா ஜெய் கபூர் பப்ளிக் ஸ்கூலில்", முதல் வகுப்பில் சேர்ந்த மாணவி ஜோத்சனா கக், இப்போது பதினோராம் வகுப்பு மாணவி. பள்ளி விடுமுறை நாட்கள் தவிர, இந்த பதினோரு வருடத்தில் இந்த மாணவி, ஒரு நாள் கூட பள்ளிக்கு லீவு போட்டது கிடையாது.

■ டாக்டர் ஸ்ரீகாந்த் ஜிகார், ஒரு எம்.பி.பி.எஸ். டாக்டர் மட்டுமல்ல; மருத்துவத்தில் மேல் படிப்பாக எம்.டி. தேறியவர். அதோடு, சட்டமும் எம்.பி.ஏ.வும் படித்தவர். இவை தவிர, பதினேழு பல்கலைக் கழகப் பட்டங்கள் பெற்றவர். போதாக் குறைக்கு 1978-ல் ஐ.பி.எஸ். தேறி, அதன் பின் 80-ல் ஐ.ஏ.எஸ். தேறி, பின்னர் அதையும் ராஜினாமா செய்து விட்டு, மகாராஷ்டிர மாநில சட்டசபைத் தேர்தலில் போட்டியிட்டு, மிகவும் இளைய எம்.எல்.ஏ. வாக சட்டசபைக்குப் போன பெருமை உடையவர்.

# சில "நிஜமாவா!" செய்திகள்

■ ஜஸ்பீர் குமார் பேடி, துபாயில் வாழும் இந்தியத் தொழிலதிபர். இவருக்கு துபாயும் இந்தியாவும் அடுத்தடுத்த வீடுபோல. இவரது மிக அதிக விமானப் பயணம் காரணமாக இவரது பாஸ்போர்ட்டுக்கு 25 இணைப்புப் புத்தகங்கள் உள்ளன!



■ ராஷ்டிரபதிபவனில் தேக்கு மரத்தா லான பிரம்மாண்டமான சாப்பாட்டு மேஜை உள்ளது. இதில் ஒரே நேரத்தில் 104 பேர் அமர்ந்து சாப்பிடலாம்.

■ பிரபல சட்டநிபுணர் பல்கிவாலாவின் பட்ஜெட் விமர்சன உரை வெகு பிரசித்தம். இது போலக் கடந்த 30 ஆண்டுகளாய்ப் பல்வேறு நகரங்களிலும் உரையாற்றி வருகிறார். 1992 மார்ச்சில் இவர் உரையைக் கேட்க பம்பாயில் ஒரு லட்சம் பேர் கூடினார்கள்.

நன்றி : விம்கா சாதனைப் புத்தகம்

தொகுப்பு : மௌஷ்மி




# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்டு லிமிடெட்

பதிவு அலுவலகம் :- 8, கற்பகாம்பாள் நகர், லஸ்
மைலாப்பூர், சென்னை - 600 004 போன் : 4993241/4990953
கிளை அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு,
பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை - 600 003
போன் : 563055

ரொக்க நடவடிக்கை : காலை 8:30 முதல் மாலை 5:30 வரை
ஞாயிறு காலை 8:30 முதல் பகல் 12:30 வரை
வரவு செலவுகள் அங்கத்தினர்களுடன் மட்டுமே
(வெள்ளிக் கிழமை விடுமுறை)

## கடன்

நகைகள் பேரில் கிராம் 10க்கு ரூ. 3000/- வழங்கப்படும்.
சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும்.

## இயக்குநர்கள் :

| பெயர் : | விலாசம் : |
|---|---|
| திரு T. V. ஸ்ரீனிவாசன் | 15, லஸ் அவின்யூ, சென்னை - 4. |
| திரு P. K. சந்திரசேகரன் | 89, போயஸ் கார்டன், சென்னை 86 |
| திரு ப்ரவீன் கோவிந்தராவ் | 22, போயஸ் கார்டன் சென்னை 86 |
| திருமதி P. C. சுந்தரவதனி | சுந்தரவதனி கல்யாண மண்டபம் எழும்பூர், சென்னை 7- ✆ 828107 |
| திரு P. K. C. ரமேஷ் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு D. தனுஷ்கோடி | 21/1A, பழைய குயவர்பாளையம் ரோடு, மதுரை - 625 009 |
| திரு P. C. பாஸ்கர் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு K. R. நிரஞ்சன் குமார் | 1, பின்னி ரோடு, சென்னை - 86 |
| திரு P. C. ஷியாம் சுந்தர் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு K. G. கிருஷ்ணன் | Y-210, 2வது அவென்யூ, அண்ணா நகர், சென்னை - 40. |

OUR
VALUED
DEPOSITOR



Sri K. G. Appusamy
Ex. Chairman &
Managing Director –
AIR INDIA

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும்

"ரொம்ப சிறந்த படத்தைக் கொடுக்கணும். யாரும் சொல்லாத வகையில் காதலைச் சொல்லணும். ஆட்டமும் பாட்டமும் பரவசப்படுத்தணும். 'ஜென்டில்மேன்' புகழை தக்கவைத்துக் கொள்ளணும். ஆனால் என் ஸ்கிரிப்டைத் தான் நம்பியிருக்கிறேன்" என்று ஷங்கர் சொன்னார். காதலனில் வரும் ஒரு பாடல் காட்சியை சிந்து சமவெளிப் பகுதிக்குப் போய் எடுத்திருக்கிறாராம்.

கூட்டிக் கழித்துப் பார்த்தால் நான்கு கோடியைத் தாண்டி விடுமாம் பட்ஜெட் "டேக் இட் ஈஸி, மிஸ்டர் குஞ்சுமோன்" (காதலனில் 'டேக் இட் ஈஸி' என்பது ஒரு பாடலின் பல்லவி என்பதை அறிக.)

சினிமா பரமபதத்தில் பெரிய ஏணி மூலம் உச்சாணிக்குப் போன குஷ்பூவிற்கு





• வாசு : பயந்து பயந்து...



• பாரதிராஜா : புதிய கூபெவிகால்

இப்போது இறங்கு முகம். சரசரவென்று சறுக்கிக் கொண்டிருக்கிறார்.

நட்சத்திர இயக்குநர்கள், முன்னணி நடிகர்களோடு மட்டுமே பணியாற்றிக் கொண்டிருந்தவர், இப்போது அடுத்த நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார். நிஜம்தான் ஐயா, குஷ்பூவின் கையில் இரண்டே படங்கள்! (த்ஸொ... த்ஸொ...!) நெப்போலியனுடன் 'என் பொண்டாட்டி நல்லவ' படத்திலும், டி. ராஜேந்தரின் நாயகியாக 'மௌனமான ரோஜா' படத்திலும் மட்டுமே நடிக்கிறார்.

"மன்சூரலிகானின் தனிக்கட்சி" என்று பரபரப்பான புது தகவல் சொன்னார் தமிழாகரன் என்கிற பாட்டாளிதாசன் என்கிற மன்சூரலிகான்.

அடடா! புது கட்சியா? என்ன கொடி? என்ன கொள்கை? என்று ஆலாகப் பறந்தால் அது அவருடைய அடுத்த படத்தின் டைட்டிலாம். சப்!

மன்சூர் எழுதி இசையமைத்திருக்கும் 'வாழ்க சனநாயகம்' படத்தின் பாடல் காசெட்டைக் கேட்டு ரசித்த ஒரு நட்சத்திர இயக்குநர் "என்னுடைய படத்திற்கு இசையமைத்துத் தருவீர்களா?" என்று கேட்டிருக்கிறார்.

மன்சூர் என்ன பதில் சொன்னார் என்பது சஸ்பென்ஸ்.. என்றாலும் அந்த நட்சத்திர இயக்குநரின் பெயரை வெளியிடத் தடை இல்லை. அவர் ரோஜாவின் ராஜா.. ஆர். கே. செல்வமணி.

பாரதிராஜாவுக்கும் ரகுமானுக்கும் இடையில் என்ன கசமுசா என்று தெரியவில்லை. பா. ராஜாவின் 'தமிழா தமிழா' வுக்கு ரகுமான் ம்யூஸிக் இல்லை. மாறாக, மரகதமணி. இது ஒரு நியூஸ் என்றால் அடுத்தது இதைவிட சுவாரஸ். சமீபத்தில்



• காதலன் :
சிந்து வெளியில் ஷங்கர்

நடந்த பஞ்சு அருணாசலத்தின் மகள் திருமணத்தில் பாரதிராஜாவும் இளையராஜா வும் சந்தித்து மிக மிக மிக நீண்ட நேரம் அள வளாவியிருக்கிறார்கள், பழசையெல்லாம் மறந்து- புதிய பெவிகாலுக்கான ஃபார்முலா உருவாகியிருக்கும் என்று நம்புவோமாக!

சப்தம் போடாமல் 'சாது'வை இயக்கிக் கொண்டிருக்கிறார் பி. வாசு. வா. வெ. வேலுக்குப் பிறகு அவருக்கு நேரம் சரியில்லை. எனவே ரொம்ப பயந்து பயந்து பண்ணிக் கொண்டிருக்கிறார். 'சாது' ஹீரோயின் - நம்மூர் நடிகைகளில் ஒருவர் இல்லை. பம்பாய் இறக்குமதி. ரவீனா என்பது நாமகரணம். ரொம்பச் சின்னப் பெண். (நேர்ல பார்த்தேங்க!) பிரசாத் ஸ்டுடியோவில் ஆடிக் கொண்டிருந்தவரைச் சுற்றி இரண்டு சல்வார் மாமிகள் மற்றும் ஒரு குர்தா மாமா - பாடி கார்ட்ஸ் என்றார்கள்.

# மன்சூரலிகானின் தனிக்கட்சி!



# நரகமான நகரம்

## 10

பிரகாஷுக்கு 'நாம் என்ன செய்தோம். என்ன செய்ய வேண்டும்' என்று கணிக்க அப்போது முடியவில்லை. ஆகாய விமானத்திலிருந்து தலைகீழாகத் தரைக்கு வருவது போல் இருந்தது. குளறினான்.

"சார்... நான்... எனக்கு இதெல்லாம் ஒண்ணும் தெரியாது..."

"என்ன தெரியாது?" டி. ஸி. பி. உன்னிப்பானார்.

"இந்த லாகிரி அய்ட்டம். எப்படி... இது...? நான் கொண்டு வரலை..."

"நீ கொண்டு வரலை? இப்போ உன் கையிலிருந்து வாங்கின சூட்கேஸ் இது. இதனுள்ளே இருந்தது இந்த வகையறா. எப்படி நீ கொண்டு வரலை?"

"அஜய்... என்னிடம் இந்தப் பெட்டியைக் கொடுத்து ஹோட்டல் பானுவில் பாலேகர் ஸாஹிப் இருக்கார். கொண்டு போய்ச் சேர்ப்பிச்சிடுன்னு சொன்னார். அதான் நான் கொண்டு வந்தேன்."

"பிரகாஷ்... உன் மேல எனக்கு அப்பவே சந்தேகம். அன்னிக்கு அந்தக் கொலையிலேயே நீ சம்பந்தப்பட்டிருக்கே!"

"அப்போ நான் சொன்னதெல்லாம் உண்மை சார்..."

"இப்போ சொல்றதுதான் பொய்யா?"

"இல்லவே இல்லை சார்....! இது ஹெராய்ன்னு எனக்குத் தெரியவே தெரியாது சார்..."

"நடிப்பு போதும் பிரகாஷ். ஆபீஸ் போய்ப் பேசுவோம். வண்டியில் ஏறு."

"ப்ளீஸ்... சார்... பாலேகர் ஸாஹிப் ஹோட்டலில் உன்னேதான் இருப்பார். அவரை வேணுமானால் கேட்டுப் பாருங்க..."

"கான்.. இவனை வண்டிக்குள்ள தள்ளி பத்திரப்படுத்துங்க. நான் ஹோட்டலுக்குள் போய்ட்டு வர்றேன்."

டி.எஸ்.பி. ராஜேந்திரவர்மா இன்னொரு காவலருடன் ஹோட்டலுக்குள் போனார். பிரகாஷுக்குத் தானும் அவர் பின்னால் ஓட வேண்டும் போலிருந்தது.

மூன்று நிமிடங்களில் டி.எஸ்.பி. அகலமாக அடியெடுத்து வைத்துத் திரும்பி வந்தார். அவர் பின்னால் டை கட்டிக் கொண்டு, ரொம்ப பகட்டாக உடை உடுத்தியிருந்த நடுத்தர வயது நபர். பிரகாஷை இருவருமே மிருகக்காட்சிசாலையில் கூண்டுக்குள் இருப்பதைப் பார்ப்பது போல் பார்த்தார்கள். பிரகாஷ் பரிதாபமாக விழித்தான்.



"மேனேஜர்! இவனை இதற்கு முன்னால் பார்த்த ஞாபகம் இருக்குதா? உங்க ஹோட்டலுக்கு அடிக்கடி வர்ற ஆளா?"

"அடிக்கடி வர்ற ஆளுன்னா எனக்குப் பழகின முகமாகத் தெரியணுமே... இவனை இதுக்கு முன் நான் பார்த்ததே இல்லே!"

"அப்போ ஷில்பாவோட பாலேகர் இன்னிக்கு ஹோட்டலுக்கு வரவே இல்லை?"

"இல்லை சார்... நிச்சயமாத் தெரியும். அவர் இங்கே பெர்மனண்ட்டா ஒரு அறை எடுத்திருக்கார். அடிக்கடி வருவார். ஆனா இன்று வரலை."

மேனேஜரைத் திருப்பி அனுப்பிவிட்டு, டி. எஸ். பி. நீல நிற வேனின் அருகில் வந்து, "ஆபீஸ் போங்க" என்றார்.

"சார்... சார்..." என்ற பிரகாஷின் கெஞ்சலைச் சட்டை செய்யாமல் அவருடைய தனிப்பட்ட அம்பாசிடரில் அமர்ந்து வயர்லெஸ் எடுத்துக் கரகரவெனப் பேசிவிட்டு, காரைக் கிளப்பச் சொன்னார்.

ஆர்தர் ரோடு நர்கோட்டிக் செல், பம்பாயின் போதை மருந்து வியாபாரிகளின் திமிர் முறித்து அடக்குவதில் பிரசித்தம். அந்தக் கட்டடத்திலேயே தானும் ஒரு முக்கியக் குற்றவாளியாகக் கருதப்பட்டு விசாரணைக்கு உள்ளாவோம் என்று ஒரு மில்லி அளவுக்குக் கூட அவன் எண்ணியதில்லை.

பிரகாஷைக் கான் கைத்தாங்கலாய் அழைத்துப் போய் 'டி. எஸ். பி. ராஜேந்திர வர்மா' என்று எனாமல் போர்டு வைக்கப்பட்டிருந்த அறைக்குள் தள்ளி ஒரு அடிஸ்டூல் ஒன்றில் அமர வைத்தார்.

"சார்... நான் இல்லை... நான்... இல்லை..." என்றான் பிரகாஷ்.

"ஸ்... ஸ்..." என்று இரண்டு உதடுகளையும் ஒற்றை விரல் வைத்துச் சைகை காட்டினார். இரண்டு கான்ஸ்டபிள்கள் ரைஃபிளோடு வந்து அவனுக்குக் காவல் நின்றதும் கான் போய் விட்டார்.

பிரகாஷ் யோசனை செய்ய அவகாசம் கிடைத்தது. தன்னை ஒரு பகடைக்காயாய் உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். சூட்கேஸினுள் ஹெராய்ன் வைத்து அனுப்பியுள்ளார்கள். இந்தப் பதினைந்து நாட்களில் எத்தனை தடவை இதேபோல் அனுப்பி உள்ளார்கள்! அன்று கொலை நடந்த சமயமும் இதேபோல் தான் அனுப்பினார்கள். பெட்டியைத் திறக்க வாய்ப்பு இல்லை. தனக்குச் சந்தேகம் ஏற்பட்டும் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டிருந்தான் - கொடுத்த வேலையைச் செய்துவிட்டுப் போவோமே என்று.

டி. ஸி. பி. உள்ளே வந்தார்.

"பிரகாஷ்... உன்னோட வீட்ல யாரெல்லாம்...?"

அப்பா, அம்மா, அப்பாவின் உயர்தரமான 'ஹெராய்சஸ்ட்' கம்பெனி வேலை. நிஷா, அவளுடைய அப்பாவின் மெட்டல் கம்பெனி என அனைத்தையும் விடாப்பிடியாகக் கூறினான். தன்னை ஓர் உயர்ந்த ஆசாமி போல் பேசிக் காட்டினான். தன் குடும்பம் அந்தஸ்து உள்ளது என்று உணர்ந்து பேசினான்.

"வீட்டு அட்ரஸ் கொடு... போன் நம்பர் உண்டா...? கான்... கான்..."

கான் உள்ளே ஓடி வந்தார். அவரிடம் அட்ரஸையும், போன் நம்பரையும் தந்த டி.ஸி.பி., "யார் இருந்தாலும் வரச் சொல்லுங்க..." என்றார்.

**ப**ன்னிரண்டு மணிக்கு நிஷா, அவளுடைய அப்பா கிருஷ்ணராவ், பிரகாஷின் அம்மா மூவரும் நெஞ்சில் அடித்துக் கொண்டு ஆர்தர் ரோடு வந்தார்கள். அவர்களை அடக்கினார்கள் கான்ஸ்டபிள்கள்.

என்ன காரணத்துக்குப் பிரகாஷை அரெஸ்ட் பண்ணினார்கள் என்று மூவருக்கும் தெரியவில்லை. கிருஷ்ணாராவ் நிஷாவைக் கேட்டார் :

"நிஷா... அன்னிக்கு அந்த என்கொயரிக்குப் பிறகு... யாரும் பிரகாஷுடன் தொடர்பு கொள்ளலைதானே?"

"இல்லைப்பா. அந்தக் கொலையைப் பிரகாஷ் அப்படியே மறந்துட்டான். போலீஸ் தொந்தரவும் இருக்கலை..."

"மர்டர் கேஸ் விஷயமா அரெஸ்ட் பண்ணினால் இங்கே கொண்டு வரமாட்டாங்க. முகமது அலி ரோடு கமிஷனர் ஆபீஸுக்குத்தான் கொண்டு போவாங்க..."

"அப்போ... இங்கே.?"

"அந்த டி. ஸி. பி. ராஜேந்திரவர்மா நர் கோட்டிக் ஸெல் கமிஷனர்."

நிஷா அதிர்ந்தாள்.

"என் பிள்ளை அப்பாவி. போலீஸ் பற்றிய படம் டீ. வி. யில் பார்க்கும்போதே பாதியில் நிறுத்திடுவான். சத்திக்குத்து, துப்பாக்கிப் படமே பார்க்க மாட்டான். 'ப்ரெட்டி வுமன்' மாதிரி படம்தான் பார்ப்பான்..." பிரகாஷின் அம்மா புலம்பினாள்.

கான் வேகமாக வந்தார் கிருஷ்ணாராவிடம். "நீங்கதான் பிரகாஷோட அப்பாவா...?"

"இல்லை... மாமனார்... இவ என் மகள். ரெண்டு பேருக்கும் கல்யாணம் முடிவாகி விட்டது."

"இந்த அம்மா?"

"பிரகாஷோட அம்மா..."

"அவர் 'ஹெராய்சஸ்ட்' கம்பெனி வொர்க்ஸ் மேனேஜர். போன் போட்டுச்

"நம்ம தேர்தல் அறிக்கை மக்கள் மத்தியில் அதிகமா பேசப் படுது தலைவரே!"

"பலே, பலே! என்ன பேசிக் கிறாங்க?"

"நம்ம தேர்தல் அறிக்கையில விஞ்சி நிற்பது கற்பனா சக்தியா, இல்லை வார்த்தை ஜாலமான்னு பட்டிமன்றமே நடத்துறாங்க!"

– உ. ர. சங்கர்






TRADE MARK

**47** ஆண்டுகளாக உங்கள் பத்திரங்களைப்
பாதுகாக்க எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்
பயன்பட்டு வருவதுபோல உங்கள் சேமிப்புகளை
பாதுகாக்க எங்கள் டெபாசிட் திட்டம்...

**குமுலேட்டிவ் டெபாசிட்டில் முதலீடு செய்து மூன்றே ஆண்டுகளில் இருமடங்காக பெறுங்கள்.**

கணக்கிடப்படும்
வட்டி விகிதம்

# 24%

PER ANNUM

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி சதவீதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000

# MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, P.B. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.

✆ Off: (0451) 23316, 25260 & 27637. Res: 25643 & 23726.
Grams: COCKFILE.

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

ADWAVE/MI/4698/Tam B.R



சிங்கப்பூர் ஜூவல்லரி

333, கிராஸ்கட் ரோடு,
காந்திபுரம், கோவை - 12.
போன்: 230222, 235958, 236639.

**24%**
**வருட வட்டி**
**பிக்சட் டெபாசிட்டுகள்**
**ஏற்றுக் கொள்ளப்படுகிறது.**
**டெபாசிட் சேமிப்பு**
**1994 ஜூலை 15 வரை மட்டுமே!**

ரூ. 10,000/-மூன்றாண்டுகளில்
ரூ. 20,000/- ஆக இரட்டிப்பாகிறது.

| காலம் | வட்டி விகிதம் (P.A) |
|---|---|
| 1 மாதம் | 21% |
| காலாண்டு | 22% |
| அரையாண்டு | 23% |

* ஜூலை மாதம் 15ம் தேதிக்குப் பிறகு செய்யப்படும் டெபாசிட்டுகளுக்கு முன் கூட்டியே பதிவு செய்திருந்தால் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படும்.
* குறைந்தபட்ச டெபாசிட் தொகை ரூ. 1,000/-மற்றும் கூடுதல் தொகை.
* ரூ. 10,000/- க்கும் மேல் டெபாசிட் செய்வோர்க்கு இலவசப் பரிசு.
* மத்திய, மாநில அரசு அலுவலர்களுக்கு முன்னுரிமை.

**கிரெடிட் கார்டுகள்**
**ஏற்றுக்கொள்ளப்படும்**

சொல்லிட்டோம். கார்ல புறப்பட்டு வர்றார்."

"ஓ.கே... டி. எஸ். பி. ஒவ்வொருவரா விசாரணை பண்ணுவார். உங்க பேர் என்ன?"

"கிருஷ்ணராவ்..."

"நீங்க போங்க..."

டி. எஸ். பி. இடத்தைவிட்டு எழாமல், "உட்காருங்க..." என்றார்.

கிருஷ்ணராவ் கோபமாக அமர்ந்தார்.

"மிஸ்டர் டி. எஸ். பி., நான் எச்சரிக்கிறேன். கோடிக்கு மேல் சொத்து உள்ளவன் நான். பணம் என்னோட பின்பலம். திருடன் அல்லது கள்ளக் கடத்தல்காரன் போல் கருதி என்னை விசாரணை பண்ண வேண்டாம்னு எச்சரிக்கிறேன். பிரகாஷ் என் மாப்பிள்ளையாகப் போகிறவன். தப்பான முடிவு எடுத்து எங்களை வதைச்சால் நீங்க நிறையப் பிரச்னைகளைச் சந்திக்க வேண்டி வரும்."

அனுபம் கெர் போல் அட்டகாசமான டயலாக் பேசிவிட்டு எழுந்தார் கிருஷ்ணாராவ். கூடவே எழுந்து நின்ற டி. எஸ். பி., அவருடைய தோளில் மெல்லத் தட்டி மறுபடி உட்கார வைத்தார். பின்பு தமது மேஜை அருகில் நின்று கொண்டு கேட்டார்:

"பிரகாஷ் பற்றி உங்க அபிப்பிராயம் என்ன?"

"நல்லவன். உண்மையானவன். அவனை ஏன், எதுக்கு, எப்படி அரெஸ்ட் பண்ணியிருக்கீங்கன்னு புரியலை."

"அந்தேரியில்... ஒரு சூட்கேஸ் நிறைய ஹெராய்னோடு அவனை அமுக்கிட்டோம்..."

"என்ன...!" அதிர்ந்தார் கிருஷ்ணாராவ்.

"அம்பது லட்ச ரூபாய் மதிப்புள்ள ஹெராய்ன்!"

"அவன் அப்படியெல்லாம் பண்ண மாட்டான் சார்..."

"சும்மா நடிக்காதீங்க, கிருஷ்ணாராவ். பெட்டிக்குள்ள அம்பது லட்ச ரூபாய் ஹெராய்ன் வச்சுக்கிட்டு எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு சொன்னா நம்ப முடியுமா? ஏன் நாங்க உங்க மேலேயும் சந்தேகிக்கக் கூடாது?"

"போதைப் பொருள் கடத்தல்ல நான் ஈடுபட்டிருக்கேன்னு சந்தேகிக்கிறீங்களா?" சிரித்தார் கிருஷ்ணாராவ்.

கிருஷ்ணாராவின் பரிகாச நகைப்பு டி. எஸ். பி.க்குக் கோபம் கொடுத்தது.

(தொடரும்)

## கே.பி.க்கு நிர்வாக ஆசிரியரின் பதில்

# ஒரு விளக்கம்.

அன்புள்ள பாலசந்தர் அவர்களுக்கு, வணக்கம்.

தங்கள் 2.6.94 கடிதம் கிடைத்தது. கல்கியில் வெளியான ஒரு கார்ட்டூனுக்கு உங்களுடைய உடனடி reaction இந்தப் பத்திரிகையிடம் தாங்கள் வைத்துள்ள பெருமதிப்பை உணர்த்துகிறது என்பதால் மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைந்தேன். தங்கள் மனம் நொந்திருப்பதால் அதற்காக மன்னிப்புக் கேட்பதே இந்தக் கடிதத்தின் முதல் நோக்கம்.

எனினும் தாங்கள் விரிவாகக் கார்ட்டூனில் உள்ள குறையை எடுத்துக் காட்டியிருப்பதால் ஒரு தன்னிலை விளக்கம் தருவதிலும் தவறில்லை என்று கருதுகிறேன்.

நண்பர் பாலசுப்பிரமணியன் (பாலு) அவர்களின் நல்லிதயத்தை நானும் போற்றுகிறேன். அடுத்தடுத்து தோல்வி கண்ட படங்களால் சோர்வுற்றிருந்த நண்பரிடம், "அடுத்த படத்தில் வெற்றி பெறப் போகிறீர்கள்; நானும் ஒரு புதிய கார் உங்களுக்குப் பரிசளிக்கப் போகிறேன்" என்று கூறி ஊக்குவித்த பாலுவின் பண்பான இதயத்தை நானும் வாழ்த்துகிறேன். பொதுப்பணம் அல்ல, அவரது சொந்தப் பணத்திலிருந்து வாங்கித் தரப்பட்ட கார் என்பதையும் அறிவேன். இதையொட்டி இரண்டு கேள்விகள் எழுகின்றன:

1. இது விமர்சனத்துக்கு அப்பாற்பட்டதா?

2: எதற்காக இந்தப் பரிசு?

K. Balachander

நட்பு முறையில் வாக்களித்த திரு. பாலு, அதே தனிப்பட்ட நட்புமுறையில் வாக்குறுதியை நிறைவேற்றியிருந்தால் விமர்சனத்துக்கே இடமில்லை. ஆனால் பத்திரிகையாளர் உள்படப் பலருக்கும் அழைப்பு அனுப்பி, ஊர் அறியச் செய்திருக்கிறார். எனவே விமர்சனத்துக்கு அப்பாற்பட்டதாக எண்ண முடியாது.

பரிசு, 'கிழக்குச் சீமையிலே' படத்தின் வெற்றிக்காகத் தரப்பட்டுள்ளது. 'கிழக்குச் சீமையிலே' படம் வசூலில் வெற்றி பெற்றாலும் கடுமையான விமர்சனங்களுக்கு உள்ளாகியது என்பது அனைவரும் அறிந்ததே - குறிப்பாக அதில் உள்ள அதீத வன்முறைக் காட்சிகளும் ஆபாசச் சொற்றொடர்களும். கல்கி பாரதிராஜாவை, இது குறித்து பேட்டி கூடக் கண்டது. அவர் தமது நிலையை நியாயப்படுத்த முயன்ற போதிலும் அவரது சமாதானங்கள் எங்களைப் பொறுத்தமட்டில் ஏற்கத் தக்கவையாக இல்லை. பொதுவாகவே இன்று திரைப்படங்களில் ஆபாசமும் வன்முறையும் மலிந்து வருவது பற்றியும் இதில் உள்ள ஆபத்துக்கள் குறித்தும் உலகளாவிய அளவிலேயே நிறைய பேசப்படுகிறது: ஆனால் எதுவும் செய்யப் படுவதில்லை. கமலின் சமீபத்திய வெற்றிப்படமான "மகாநதி"யில் கூட வன்முறை மிகுதி என்பதைக் கல்கி எடுத்துக் காட்டத் தவற வில்லை.

எனவே பாரதிராஜாவின் 'கிழக்குச் சீமையிலே', வசூலில் வெற்றிப் படமானாலும் திரைக் கலை என்ற அளவில் அவருக்குச் சரிவே என்று கல்கி கருதுவதில் தவறில்லை.

ஏராளமான போற்றுதற்குரிய வெற்றிப் படங்களை எடுத்து உயரே, உயரே சென்ற பாரதிராஜா, தற்போது சரிவுப் பாதையில் செல்கிறார் என்பதும் இது மாறி, மீண்டும் அவர் உன்னதமான சிகரங்களை நோக்கிச் செல்ல வேண்டும் என்பதும் எங்கள் அவா. அதன் வெளிப்பாடுதான் அந்தக் கார்ட்டூன். இறக்கத்தை மட்டுமின்றி ஏற்றத்தையும் கார்ட்டூன் காண்பிக்கிறது என்பதைக் கவனித்தால் எங்கள் இதய சுத்தியைச் சந்தேகிப்பதற்கில்லை. பாரதிராஜா சிந்திப்பதைக் கார்ட்டூன் உணர்த்துகிறது. சரியான பாதையைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்புடன் அவர் நடந்து கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லாமல் சொல்கிறது.

கார் பெற்றுக் கொண்டதால் சரிவு ஏற்பட்டு விடுமோ என்ற கவலை அல்ல எங்களுக்கு. மாறாகக் கலை நோக்கில் சரிவை ஏற்படுத்திய ஒரு படத்துக்குக் கார் பரிசு தரப்பட்டிருப்பதால் கவலை. மேலும் சரிவுக்கு ஊக்கமளிப்பதாய் இருந்து விடக்கூடாதே என்ற கவலை. இது போலித்தனம் அல்ல. பாரதிராஜா போன்ற கலை உலக பிரும்மாக்கள் பொறுப்புணர்ந்து நடந்து கொள்ள வேண்டும் என்ற நிஜமான எதிர்பார்ப்பு. இதைத்தான் கார்ட்டூன் வெளியிடுவதாகக் கருதுகிறோம்.

ஆயினும் எங்கள் நோக்கம் சரியாகக் கார்ட்டூனில் பிரதிபலிக்கப்படவில்லை என்று தாங்கள் கருதினால் அதற்காக வருந்துகிறோம்.

மிக்க அன்புடன்,
கி. ராஜேந்திரன்

# மணிவிழா காணும் மணலியார்!



படம்-நன்றி : தினத்தந்தி



• மணலியார்

தமிழ் நாட்டில் தொழில் அமைச்சராக இருந்த முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வெங்கடராமன், "மணலியில் பெட்ரோலிய சுத்திகரிப்பு ஆலை அமைக்க ஆயிரம் ஏக்கர் நிலம் வேண்டும். விலையாக ஏக்கருக்கு மூவாயிரம் ரூபாய் கிடைக்கும். நீங்கள் நிலத்தைத் தந்துவிட்டால் நல்லது!" என்று ராமகிருஷ்ண முதலியாரிடம் சொன்னார். வெளிப்படையாகவே, 'தர முடியாது' என்று மறுத்து விட்டார் மணலி ராமகிருஷ்ண முதலியார். விஷயம் முதலமைச்சர் காமராஜருக்கு எட்டியது.

காமராஜர் வந்தார். "நீங்கள் நிலத்தைத் தர முடியாது என்று சொல்லி விட்டீர்களாமே? அப்படியானால் தமிழ் நாட்டுக்குத்தான் நஷ்டம். இந்தத் தொழிற்சாலை ஆந்திராவில் உள்ள விசாகப் பட்டினத்துக்குப் போய் விடும். சஞ்சீவரெட்டி காத்துக் கொண்டிருக்கிறார், அங்கே கொண்டு போய்விட! என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"அப்படியா விஷயம்? ஆயிரம் ஏக்கர் நிலம்தானே? தந்துவிடுகிறேன்!" என்று நிலத்தைக் கொடுத்து விட்டார்.

"அன்றைக்கு நான் பிடிவாதமாக நிலத்தைக் கொடுக்க மறுத்திருந்தால், இன்று வரை இந்தப் பாவத்துக்காக வருந்திக் கொண்டிருப்பேன்!" என்கிறார் மணலி ராமகிருஷ்ண முதலியார்.

காமராஜரிடம் அப்படி என்ன மரியாதை, மணலியாருக்கு? காரணம் இருக்கிறது. அதைச் சொல்வதற்கு முன்.

கூட்டுறவுத் துறையில் தீவிர ஈடுபாடு மணலியாருக்கு. காஞ்சிபுரம், செங்கல்பட்டு மாவட்ட கூட்டுறவு வங்கித் தலைவராக ஏழு வருடங்கள் தொடர்ந்து இருந்தார். அப்போது நடந்த மாவட்டக் கூட்டுறவு வங்கிகள் மாநாட்டில் கலந்து கொள்ள முதலமைச்சராக அப்போது இருந்த அண்ணா போன போது, "மணலியார் காங்கிரஸ்காரர். நீங்கள் அங்கே போய் அவரை வாழ்த்தலாமா?" என்று அவரிடம், அவரது கட்சிக்காரப் பிரமுகர் ஒருவர் கேட்டார்.

"வங்கிப் பணிகளுக்காக காலணாகூட அலவன்சோ, காரோ எடுத்து உபயோகிக்காதவர் மணலியார். திறமையாக நடத்தி வருகிறார். அவரைப் போய்ப் பாராட்டுவதில் என்ன தவறு?" என்று அண்ணா கேட்டார்!

மத்தியில் ஜனதா அரசு பதவியேற்ற உடன் இந்திரா காந்தியைச் சிறையில் அடைத்தது. அப்போது அதை எதிர்த்து இங்கே மறியல் செய்தனர் மணலி ராமகிருஷ்ண முதலியார், மூப்பனார் ஆகியோர். அதனால் இங்கே சிறையில் தள்ளப்பட்டார், மணலியார். பிறகுதான் தேவராஜ் அர்ஸ் எம்.ஜி.ஆரிடம் "இந்திராவையே விடுதலை செய்து விட்டார்கள். இவர்களை எதற்கு இன்னும் சிறையில் வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டதும், விடுதலை செய்யப்பட்டார் மணலியார்.

**செ**ன்னை மல்லீசுவரர்-சென்னை கேச வப் பெருமாள் தேவஸ்தானங்கள் தவிர, மாங் காடு காமாட்சி அம்மன்-ஸ்ரீவைகுண்டப் பெருமாள் கோயில்களுக்கும் அறங்காவலர். ஸ்ரீரங்கத்தில் ஒரு வேத பாடசாலையையும் நடத்துகிறார். தஞ்சையில் ஒரு பாலிடெக்னிக் உட்பட, பல கல்வி நிறுவனங்கள் உருவாக, நிதியை வாரி வழங்கியவர்.

திருக்குறளையும், திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட உதவியதோடு, திருப்பாவையை முதல் முத லில் எல்.பி.ரெக்கார்டுகளில் கொண்டு வந்த வர் மணலி ராமகிருஷ்ண முதலியார்.

இசையில் ஈடுபாடும் கொடையுள்ளமும் மணலி குடும்பத்தாருக்குப் பரம்பரைக் குணம். கர்நாடக சங்கீதத்துக்கு, இன்று வய லின் பக்க வாத்தியமாக உபயோகிக்கப் பட, மணலி ராமகிருஷ்ண முதலியாரின் முன் னோர்களில் மூத்தவர் மணலி முத்து கிருஷ்ண முதலியார்தான் காரணம் என்றால் கொஞ்சம் ஆச்சரியமாக இருக்கும். ஆனால் அதுதான் உண்மை.

செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்கு வந் திருந்த ஐரோப்பிய வாத்தியக் குழுவினரில் ஒருவரிடம், மேற்கத்திய இசைக் கருவியான வயலினும் இருந்தது. அப்போது மணலியில் தங்கியிருந்த முத்துசாமி தீட்சிதரும், தம்பி பாலுசாமி தீட்சிதரும் அவர்கள் வாசிப்பைக் கேட்க நேர்ந்ததாம். கர்நாடக இசைக்கு வய லின் ஏற்ற பக்க வாத்தியமாக இருக்கும் என்று நினைத்த முத்தசாமி தீட்சிதர் தம் தம்பி பாலுசாமி தீட்சிதருக்கு அந்த ஐரோப் பியரிடம் சென்று கற்று வருமாறு கேட்டுக் கொண்டாராம். முத்து கிருஷ்ண முதலியார் உடனே, "அவர்களிடம் இவர் போய்க் கற்ப தாவது? அவர்கள் இங்கே வந்து இவருக்கு வயலின் வாசிக்கச் சொல்லிக் கொடுக்கட்டும். நான் அதற்கான ஏற்பாட்டைச் செய்கிறேன்" என்று சொல்லி, பாலுசாமி தீட்சிதருக்கு ஒரு வயலினும் வாங்கிக் கொடுத்தார். கம் பெனியாரிடம் முதலியாருக்கு அத்தனை செல்வாக்கு!

**கி**ண்டியில் நூறு மாணவர்கள் இலவச மாக உணவு வசதியோடு தங்கிப் படிக்கும் ஹாஸ்டல் மணலி குடும்பத்தார், காலங்கால மாக நடத்தி வருகிறார்கள்.

இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் அருகே இருக் கும் அந்த நிலத்தை அரசாங்கம் எடுத்துக் கொண்டு விடும் அபாயம் வந்தபோது, இளை ஞராக இருந்த மணலி ராமகிருஷ்ண முதலி யார், முதலமைச்சர் காமராஜரை நேரில் சந் தித்து, அந்த ஹாஸ்டல் தங்கள் கையை விட் டுப் போய்விடாதபடி காத்துக் தருமாறு கேட் டுக் கொண்டார். காமராஜர் தலையீட்டி னால் அந்த ஹாஸ்டல் தப்பியது. அன்றைக் குக் கதர் அணிய ஆரம்பித்து, காங்கிரஸ்காரர் ஆன மணலியார், பிறகு காங்கிரசில் பல பெரிய பொறுப்புகளை வகித்தவர்.

67ல் காமராஜர் விருது நகரில் ஒரு மாண வரிடம் தோற்றதை அடுத்து, அன்றிலிருந்து காலில் செருப்பே அணிவதில்லை ராம கிருஷ்ண முதலியார்!

- சாருகேசி


கேட்டறியுங்கள் உங்கள்

புதிய

ஜாதகபலன் ஜோதிட போன் இன்

இந்த வாரபலன்கள்

0011 222 222 0+□□

மேலே கொடுத்துள்ள பதினொரு எண்களையும் டயல் செய்வதுடன் உங்கள் ஜென்ம ராசிக்குக் கொடுத்துள்ள இரண்டு எண்களையும் டயல் செய்யவும்.

| 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
|---|---|---|---|---|---|
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
| 37 | 38 | 39 | 40 | 41 | 42 |
| துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |

மன ஜோதிடம்

உங்கள் வருங்கால ரகசியங்களை அறிந்திருங்கள்

☎ 0011 222 222 030

பொருத்தம்

உங்கள் துணையும் நீங்களும் ஒருவருக்கொருவர் பொருத்தமானவர்களா? என்று தெரிந்து கொள்ளுங்கள்

0011 222 222 043

பட்சி சாஸ்திரம்

ஒரு பண்டைய ஆரூட முறை. உங்கள் குறிப்பிட்ட கேள்விகளுக்கு பதில் சொல்கிறது.

☎ 0011 222 222 025

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள். எம் க ஏ. யு.எஸ்.ஏ.



• எச்சரிக்கை



• குற்றச்சாட்டு



• அழகுதானா?



• 'ஃபீட்பாக்' தேவை

● ஏ. எஸ். மாரியப்பா, புதுக்கோட்டை.

? 'மாநிலங்கள் தங்கள் செலவுகளைக் கட்டுப்படுத்தாவிட்டால் மத்திய அரசு திவால் ஆகி விடும்' என மன்மோகன் சிங் எச்சரிக்கை விடுத்துள்ளாரே?

! அவர் சொல்வதை மாநில அரசுகள் கேட்பதாகவும் தெரியவில்லை; மாநில அரசுகளுக்கு மத்திய அரசு முன்னுதாரணமாக விளங்கி வழிகாட்டுவதாகவும் தெரியவில்லை.

● வி. சிவா, அரசரடி.

? 'தோல்வி உறுதி என்று தெரிந்ததும் வோட்டுப் பெட்டிகளைத் தீ வைத்துக் கொளுத்த தி.மு.க. வினர் திட்டமிட்டனர்' என்று எஸ்.டி.எஸ். குற்றம்சாட்டியுள்ளது பற்றி...?

! இத பாருங்க, இப்படித்தான் ஹரியானா முதல்வர் தமது அமைச்சர் ஒருவர் விமானப் பணிப் பெண்ணிடம் வம்பு பண்ணினதாகவும் அதற்காக பதவியிலிருந்து நீக்குவதாகவும் சொல்றார். அமைச்சரோ, 'நான் அப்படி நடந்து கொண்டிருந்தால் விமானக் குழுவும் பயணிகளும் சும்மா இருந்திருப்பாங்களா, என்னைக் கழற்றி விட அபாண்டமா பழி சுமத்தறார்'ன்றார். எதை நம்புறது? இன்றைய அரசியல்ல, தலைவருங்க சினிமாக் கதை எழுதறது சகஜமாயிட்டுதுங்க.

● மாலினி சௌரிராஜன், ஸ்ரீரங்கம்.

? மிஸ். யூனிவர்ஸ்-94 அழகாகவா இருக்கிறார்?

! இந்தக் கேள்வியை சௌரிராஜன் கேட்டிருந்தால் பட்டிமன்றத்துக்கே ஏற்பாடு செய்யலாம். மாலினி கேட்கும் போது யோசிக்க வேண்டியிருக்கு! புற அழகுக்காக மட்டும் கொடுக்கிற பட்டமில்லீங்க; உள்ளத்தின் அழகையும் சோதிக்கிறாங்க!

● க. சாந்தி குமார், காட்டாடி.

? சென்னை டீவியில் இனி மாதம் பத்து சினிமாவாமே?

! போதாக்குறைக்கு தொடர் நிகழ்ச்சிகளுக்கு விண்ணப்பித்துள்ளவர்களில் தொண்ணூறு சதவீதம் பேர் சினிமா உலகத்தவர்தானாம்!

● எம். இராஜேந்திரன், லால்குடி.

? புதிய தலைமைச் செயலர் ஹரிபாஸ்கர் பற்றி ஏற்கெனவே பல புகார்கள் உள்ளதாமே?

! அதுக்கென்னங்க பண்றது? அவரை அந்தப் பதவியில் நியமிச்சவர் பேரிலும்தான் ஏகப்பட்ட குற்றச்சாட்டுக்கள் இருக்கு! மின்னலடிக்கிற வெண்மையான ஆசாமிங்களைத்தான் போடணும்னா யாரையுமே எந்தப் பதவியிலுமே நியமிக்க முடியாதுங்க, இன்னிக்கு சூழ்நிலை அப்படி ஆயிடுச்சு!

## மிஸ் யூனிவர்ஸ் '94 அழகாகவா இருக்கிறார்?

● க. ராஜவேல், கச்சிராயபாளையம்.

? 'என் பிறந்த நாளுக்கு மரக் கன்றுகளை நடுங்கள்' என்று கலைஞர் கூறியது குறித்து...?

! அருமையான ஐடியா. உடன் பிறப்புக்கள் இதைச் செயல்படுத்தியிருந்தாங்கன்னா இன்னும் ஐந்தாறு வருஷத்திலே தமிழகமே சோலைவனமாயிடும். எந்த அளவுக்கு நிறைவேற்றினாங்க என்பதற்குக் கலைஞர் ஒரு "ஃபீட்பாக்" கேட்டா நல்லது.

● அன்பு கதிரேசன், கீழ்க்கட்டளை.

? 'எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்த போது அண்ணாநகர் இடைத் தேர்தலில் தோற்றார்; ஆனால் ஜெயலலிதா இன்று மயிலாப்பூர் இடைத் தேர்தலில் வெற்றி பெற்றுள்ளார்' என்று அமைச்சர் கண்ணப்பன் எம்.ஜி.ஆரைத் தாழ்த்தியும் 'ஜெ'யை உயர்த்தியும் பேசியிருக்கிறாரே?

! அப்படிப் பேசியதற்குக் கைமேல் பலன்



• கை மேல் பலன்



• யாத்ரா விருது



• '35 லட்சமா?'



• உள்நோக்கம் இல்லை

கிடைத்து விட்டதே - கட்சிப் பொருளாளர் ஆகி விட்டாரே!

● *வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.*

**? ஜெயின் கமிஷன் விசாரணையிலிருந்து தி.மு.க. விலகிக் கொள்ள முடிவு எடுத்த தற்குக் கூறப்படும் காரணங்கள் சரியா?**

! 1986க்கு முன் நடந்த விஷயங்கள் விசார ணைக்கு ஏற்கப்பட மாட்டாது என்னும் போது, முழு உண்மைகளும் வெளிவராது என்பதுடன் தவறான முடிவுகளுக்கும் வர வாய்ப்புண்டு. எனவே தி.மு.க.வின் ஆட்சே பணை சரியானதே.

● *இ. ராமதாஸ், சென்னை.*

**? யாத்ரா விருது பெறவிருக்கும் ஆர். கே. நாராயண் பற்றி சில வார்த்தைகள்?**

! ஆர்ப்பாட்டமில்லாத அமைதியான நடை... யதார்த்தமான நம்பக்கூடிய கதைப் போக்கு. சராசரி மனிதர்களை மறக்க முடி யாத கதாபாத்திரங்களாக வாசகர் மனத்தில் இடம் பெறச் செய்யும் ஆற்றல். அயல்நாட்டவருக்கு இந்தியாவின் ஆன்மா வைப் படம்பிடித்துக் காட்டிய தகுதி.

● *ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.*

**? சென்னையில் ஐ.ஏ.எஸ். அதிகாரி பாண் டாவைக் கட்டிப் போட்டு நகைகளைக் கொள்ளை அடித்தது பற்றி தங்கள் கருத்து?**

! "35 லட்சம் பணமா? என்னிடம் ஏது 35 லட்சம்?" என்று கொள்ளையரிடம் கேட் டேன்" என்று பாண்டாவே கூறியிருப்பதைப் பார்க்க, அவர் திருடனுக்குத் தேள் கொட்டி யது போல் தவிக்கவில்லை என்பது தெரி கிறது. கொள்ளையர்கள் அவலை நினைத்துக் கொண்டு உரலை இடித்திருக்கிறார்கள் என்று புரிகிறது. உண்மை வெளிவரவே செய்யாது; அமுக்கி விடுவார்கள் என ஊகிக்க முடிகிறது.

● *இ.சு. பாலசுப்ரமணியன், திருவண்ணாத புரம்.*

**? கடைசியில் மயிலாப்பூர் தேர்தல் செல் லும் என்று சேஷன் அறிவித்து விட்டாரே?**

! அவரது அதிகாரத்தைக் குறைக்கக் கொண்டு வரப்படும் சட்டத் திருத்தத்துக்கு எதிராக அ.தி.மு.க. நாடாளுமன்றத்தில் வோட்டளிக் கும் என்ற உள்நோக்கத்தில் அல்ல என்பது நிரூபணமாகி விட்டதே!

● *மேலை பழ. நாகப்பன், சென்னை - 41.*

**? இனி காபி...?**

! சீனி விலை உயர்ந்தால் என்ன, காப்பிக் கொட்டை விலை கூடினால் என்ன? காப்பி சாப்பிடாமல் இருக்க முடியுமா? வேறு செலவுகள் எதையாவது குறைத்துக் கொள்ள வேண்டியதுதான்! தமிழனால் காப்பி ஆசை யைத் துறக்க முடியுமென்றால் நாளையே விலை திடுதிடுவென்று சரியாதா!

● *த. பாலசுப்பிரமணியன், இராமநாத புரம்.* ❑

**? அவைக் குறிப்பிலிருந்து நீக்கப்பட்டவை களைப் பிரசுரம் செய்யக் கூடாது என்பது பத்திரிகை சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதாகத் தெரிகிறதே?**

! வெண்ணெய் திரள்வது போல் உண்மை வெளிப் பட வேண்டும் என்பதற் காக, எதையும் எப்படியும் பேச சட்டமன்ற அங்கத்தினர்களுக்கு உரிமை தரப்பட்டுள்ளது. அவர்கள் மீது அதற்காக யாரும் வழக்குத் தொடுக்க முடியாது. (அதையே சட்டசபைக்கு வெளியே அவர் களால் பேச முடியாது) சர்ச்சை சூடு பிடித்து ஒரு எல்லையைத் தாண்டும் போது சபாநாயகர் அதை அவைக் குறிப்பிலிருந்து நீக்கச் சொல்கிறார். ஆக, அவைக் குறிப்பி லேயே இடம்பெறக்கூடாததை எல்லோரும் படிக்கப் பிரசுரிக்க வேண்டும் என்பது எவ் வாறு நியாயமாகும்? அவையின் இந்த உரி மைக்குச் சட்டபூர்வமான வடிவம் தரப்பட வில்லை என்பது வேறு விஷயம். ஜனநாயகத் தில் சட்டம் எவ்வளவு முக்கியமோ, அவ் வளவுக்குச் சீரிய மரபுகளும் முக்கியம்தான். சட்ட வடிவம் தரப்படாத தேர்தல் நெறி முறைகளை தேர்தல் சமயத்தில் கட்சிகள் மீறக் கூடாது என்று வலியுறுத்தும் பத்திரிகை கள், தாங்கள் மட்டும் சட்டசபை மரபுகளை மீறலாமா?

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
த. பாலசுப்பிரமணியன்,
3/3 அரியநாயகம் பிள்ளை சந்து,
வனசங்கரி அம்மன் கோவில் தெரு,
இராமநாதபுரம் - 623 501.

'எம்பெருமானை யார் சரண் புகுந்தாலும் தோஷங்களைப் பாராமல், சந்தேகம் கிளப்பாமல் ஒப்புக் கொள்வான். சகல தோஷங்களும் அந்தச் சரணாகத முயற்சியிலேயே வெந்து சாம்பலாகிப் போம்' என்கிற தத்துவத்துக்கு இந்த விபீஷண கட்டம் சாஸ்திரமாக அமைந்து விட்டது. பெரும் பாவமோ வேறு குற்றமோ செய்தவர்கள், அபவாதத்துக்கு ஆளாகித் தவிக்கிறவர்கள், எல்லாரும் இந்தச் சரணாகதக் கொள்கையை அமிருதமாகக் காண்பார்கள். சரணாகதி செய்தவனுக்கு உய்வு உண்டு, எத்தகையவனுக்கும் உய்வு உண்டு என்பது வைஷ்ணவ சம்பிரதாயத்துக்கு உயிர்நாடி.

'வைஷ்ணவ சம்பிரதாய'த்துக்கு என்று சொன்னேன். தவறு. நம்முடைய நாட்டில் மக்கள் அனுசரித்து வரும் எல்லாச் சம்பிர தாயத்துக்குமே இது உயிர்நாடி, ஏன்? உலகத்தில் மக்கள் அனுசரித்துவரும் சகல மத சம்பிரதாயங்களுக்குமே இது உயிர்நாடி என்றும் சொல்லலாம். ஒவ்வொரு மார்க்கத்திலும் போதகர்கள் இதையே அதிகமாக வற்புறுத்திச் சொல்லுவார்கள். 'பயப்படாதே, எல்லா பாபங்களையும் நான் தீர்ப்பேன்' என்று அருச்சுனனுக்கு மட்டும் அல்ல கண்ணன் சொன்னது. உலகத்தில் எந்தப் பிரதேசத்தில் அந்தக் கண்ணன் அவதரித்து இறங்கி நின்றபோதும், இதையே சொல்லி வந்திருக்கிறான்.

# சக்கரவர்த்தித் திருமகன்

ராமாயணத்தில் ராவணன் தம்பியைச் சக்கரவர்த்தித் திருமகன் சேர்த்துக் கொண்ட வால்மீகி சித்திரத்தை இரண்டு கூறாகப் பிரித்துக் கொள்ளலாம். நீதி சாஸ்திரப்படி பகைவருடைய கூட்டத்திலிருந்து வந்த ஒருவனைச் சேர்த்துக் கொள்வதற்கு முன் என்ன ஆராய வேண்டுமோ, எப்படி ஆராய வேண்டுமோ அதை எடுத்து முனிவர் பல வழியில் காட்டியிருக்கிறார். வானர ராஜன் வாய்வழியும், சம்ஸ்கார ஸம்பன்னனான, நல்ல பண்பாட்டுக்குச் சிகரமான ஹனுமான் வாய்மொழியாகவும், தருமத்தில் ஸ்திரமாக நிற்கும் ஸ்ரீராமன் வார்த்தையாகவும், சுருக்கமாகவும் தெளிவாகவும் காட்டியிருக்கிறார்.

நீதி சாஸ்திர விளக்கத்துடன் ராமனுடைய சம்ஸ்காரம், அதாவது பயிற்சியாலும் சகஜமாகவும் ஒருவன் பெற்ற நற்குணத்தையும் காண்கிறோம். "என்னுடைய தருமம் - யார்சரண் புகுந்தாலும் இல்லை போ என்று என்னால் சொல்ல முடியாது!" என்று ராமன் சொன்னான். இதுவே ராமசந்திரனுடைய தருமம். 'ராவணனே வந்து சரணம் என்றால் தள்ளுவேனா?' என்று கேட்கிறான் சுக்ரீவனை.

ராமசந்திரனை ஈசுவர அவதாரமாக வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு இந்த



வாக்கியம் ஒரு தனி சாஸ்திரமாகிவிட்டது. பின்னால் கீதையில் 'கவலைப் படாதே, மா சுச:' என்று கண்ணன் சொல்லி முடித்த சாஸ்திரத்தையே சக்கரவர்த்தித் திருமகனும் விபீஷண கட்டத்தில் சுக்ரீவனுக்குச் சொன்னான். பாவங்கள் மலிந்த உலகத்துக்கு உயிரும் ஒளியும் தரும் மருந்து.

## 83. சேதுபந்தனம்

இதன் மத்தியில் ராவணன் ஒரு பைத்தியக்காரப் பிரயத்தனம் செய்தான். ஒரு சாரனை அனுப்பி சுக்ரீவனைக் கலைக்கப் பார்த்தான். சுகன் என்ற அந்த அரக்கன் ஆகாய மார்க்கமாக வந்து சுக்ரீவனைத் தனியாகக் கண்டு அவனுக்குச் சொன்னான்:

"லங்கேசனான ராவணன் உம்மிடம் அன்பு கூர்ந்து என்னை அனுப்பியிருக்கிறான். நீரும் அரசன், ராவணனும் அரசன். ஊரிலிருந்து துரத்தப்பட்ட இந்த ராமனுடன் நீர் சேர வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. ராமனுடன் சேர்ந்து ராவணனுடைய தீராப் பகையை ஒரு அரசனாகிய நீர்ஏன் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்? நீர் ராவணனுக்குத் தம்பியைப் போன்றவர். ராமனுடைய மனைவியை ராவணன் விரும்பி அவன் ஏதேனும் செய்தால் அதில் உமக்கு என்ன சம்பந்தம்? உமக்கு அதனால் என்ன நஷ்டம்? நீர் சரியாக யோசித்து விவேகமாக நடந்து கொள்வீராக. நீரும் உம்முடைய படையும் கிஷ்கிந்தைக்கு உடனே திரும்பிப் போவதே விவேகம்."



இவ்வாறு சுக்ரீவனைக் கலைக்கப் பார்த்தான் ராவணன்!

சுக்ரீவன் சாரனுக்குச் சொன்னான்: "ஹே நீசனே! போய் உன் அரசனுக்குச் சொல்லு. 'நீ எனக்கு அண்ணனுமல்ல, தம்பியுமல்ல. நீ துஷ்டன். ராமன் என் நண்பன். அவனுக்கு நீ சத்துருவானாய். ஆனபடியால் எனக்கும் நீ சத்துருவானாய். நீயும் உன் கூட்டமும் சீக்கிரத்தில் அழியப் போகிறீர்கள். மூடனே! ராமனை விரோதம் செய்து கொண்டு எதிர்த்து நீ பிழைக்கப் போவதில்லை. இதைத் தெரிந்து கொள். நீ எங்கே ஓடி மறைந்தாலும் பிழைக்க மாட்டாய்!' இவ்வாறு நான் சொன்னேன் என்று உன் அரசனுக்குச் சொல்."

இவ்வாறு சுக்ரீவன் அந்தச் சாரனுக்குச் சொல்லியதும் வானரர்கள் அவனைப் பிடித்து இம்சை செய்தார்கள். ராமன் உத்தரவால் அவனைக் கொல்லாமல் விட்டார்கள். அவனும் லங்கைக்கு வேகமாகத் திரும்பிப் போய்விட்டான்.

விபீஷணன் சரண் புகுந்தவுடன் ராமனுடைய உத்தரவின்பேரில் லக்ஷ்மணனும் சுக்ரீவனும் அங்கேயே விபீஷணனுக்கு லங்கா ராஜ்ய பட்டம் தந்து, சமுத்திர ஜலத்தைக் கொண்டு பட்டாபிஷேகமும் செய்தார்கள். விபீஷணன், ராமனுடன் நட்புப் பிரதிக்ஞை செய்துவிட்டான். ராவணனைக் கொல்லாமல் நான் அயோத்திக்குத் திரும்புவதில்லை என்று ராமனும் சபதம் செய்தான். பிறகு விபீஷணனும் வானர ராஜனும் லக்ஷ்மணனும் சமுத்திரத்தைத் தாண்டுவதைப் பற்றி யோசித்தார்கள். முதலில் சமுத்திர ராஜனை வேண்டிக் கொள்வதே மேல் என்று எல்லோரும் தீர்மானித்து ராமனிடம் சொன்னார்கள். 'அதுதான் என் எண்ணமும்' என்று ராமன் சொன்னான். கடற்கரையில் தர்ப்பைப் புல் பரப்பி சாஸ்திர முறைப்படி ராமசந்திரன் சமுத்திர

ராஜனை உத்தேசித்து உபவாசம் துவக்கினான்.

மூன்று நாட்கள் அன்ன ஆகாரமின்றி மௌனமாக விரதமிருந்து ராமன் சமுத்திர ராஜனைப் பூஜித்தான். சமுத்திரம் கேட்கவில்லை. பிறகு ராமன் எழுந்து இனி தன்னுடைய சக்தியைப் பிரயோகித்தே இந்தக் காரியத்தை முடிக்க வேண்டும் என்று தீர்மானித்து வில்லும் மந்திர பூர்வமாக எறிய வேண்டிய பாணங்களும் கொண்டு வரச் சொல்லி லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

சமுத்திரத்தின் மேல் பாணப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தான். பூமி அதிர்ந்தது. கடலில் கலக்கம் ஏற்பட்டது. சமுத்திர ராஜனால் அதைத் தாங்க முடியவில்லை. மேரு மலைமேல் உதய சூரியன் ஜொலிப்பதுபோல் சமுத்திரராஜன் பிரசன்னமாகி நின்றான்.

ராமனுக்குக் கைகூப்பி, "ராமசந்திரனே! இயற்கை விதிப்படி நான் நடந்து கொள்ள வேண்டுமல்லவா? தாண்ட முடியாத ஆழமும் நீர் வடிவமும் கொண்டு ஜலத்தில் வசிக்கும் பெரும் பிராணிகளுக்கும் சிறு பிராணிகளுக்கும் வாழுமிடமாக நான் இருக்க வேண்டிய நியமத்தை நான் எவ்வாறு புறக்கணிக்க முடியும்? கடந்து செல்ல முடியாதபடி அலைகளுடன் வழியடைத்து நிற்பது என் தருமம். அதை நான் விட்டுவிட இயலாது. வானரர்களைக் கொண்டு கற்பாறைகளும் காட்டு மரங்களும் போட்டு அணை கட்டச் சொல்வீர். அதற்கு இடம் தருவேன். வேலைக்குக் குந்தகமின்றியும், போட்ட கல்லும் மரமும் நீரில் தங்கும்படியும் நான் உதவுவேன். இவ்வளவே நான் செய்ய முடியும். வானரர்களில் நளன் இருக்கிறான். விசுவகர்மாவின் புத்திரனான அவன் இந்த அணையைத் திறமையாக நிர்மாணிப்பான். உமக்கு வெற்றி ஆகுக!" என்றான்.

ராமசந்திரன் உத்தரவின் பேரில் சேது பந்தன காரியம் துவக்கினார்கள். லக்ஷக்கணக்கான வானரர்கள் பெரிய ஆரவாரத்துடன் வேலை செய்து ஐந்து நாட்களில் அணை கட்டி முடிந்தது. இந்த இடத்தில் வால்மீகி முனிவர் அணைக்கட்டு வேலையை விஸ்தாரமாகச் சித்திரித்து விளக்குகிறார். தற்காலத்தில் பெரும் அணைகள் கட்டும் அமர்க்களமாகவே முனிவரும் சேதுபந்தனத்தைப் பாடி














# மரம் நடுவதன் பலன்



பலவிதமான மரங்களை நிழல் இல்லாத இடங்களில் உண்டாக்கி வளர்த்து, வழிப்போக்கர்களுக்கு நிழலுண்டாக்கியவன் தன் வம்சத்தில் இறந்தவர்களையும், இனி பிறப்பவர்களையும் பாவிகளாக இருந்தாலும் தூய்மைப்படுத்தப் பிதுரர்களுக்குப் ப்ரீதி உண்டாக்குபவனுவான்.

ஒருவன் இறந்த பிறகு அவனது புத்திரர் அவனைச் சாந்தியடையும்படி பலவித கிரியைகளைச் செய்வதுபோல் ஒருவன் வளர்த்த மரங்களும் அவனை சாந்தியடையச் செய்விக்கும். மரங்கள் மலர்களினுல் தேவகணங்களையும் பழங்களினுல் பிதுர்த் தேவர்களையும் நிழலினுல் அதிதிகளையும் பூஜிக்கின்றன. மலர், பழம் முதலியவற்றுடன் கூடி நின்று பூவுலகத்தில் இருப்பவர்களையும் திருப்தி செய்விக்கின்றன.

கின்னரார், உரகர், இராக்ஷஸர், தேவர், கந்தருவர், ரிஷிகணங்கள் முதலிய யாவரும் விருக்ஷங்களை விரும்புகிறுர்கள். இகத்திலும் பரத்திலும் இம்மரங்கள் தம்மை வளர்த்தவனுக்குப் புத்திரர்கள் என்று சொல்லப்படுகின்றன.

நீர்த்துறைகளை உண்டாக்குபவர்களும், மரங்களை நட்டு வளர்ப்பவர்களும், யாகங்களைச் செய்த வேதியர்களும் சத்தியவான்களும் ஒரு காலத்திலும் ஸ்வர்க்க லோகத்தை விட்டு நீங்க மாட்டார்கள்.

*(சிவ மஹா புராணம்)*

மேலும் பலன் அடைய **கிராண்ட் ஸ்வீட்ஸ்** வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு :**
சீர் முறுக்கு,
சீர் அதிரசம்,
திரட்டுப்பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள் செய்து தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்னாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையார்,
சென்னை - 20.
☎ 412557

Sarathy

## அடுத்த இதழ்....

**ராமேஸ்வரம் சிறப்பிதழ்!**

●● நடுக்கடலில் நாய் படாதபாடு!

- எரியும் மீனவர் பிரச்னை

●● பக்தி பிஸினஸ்!

●● சரித்திரம் படைக்கும் சாமியார்!


யிருக்கிறார். வானரர்கள் காடுகளிலும் மலைகளிலும் சென்று ஆயிரக்கணக்கான மரங்களைப் பெயர்த்து சமுத்திரக் கரைக்கு இழுத்து வந்து போட்டார்கள். மரங்களும் மலைகளும் கடலில் விழும்போது அலைகள் மேலே கிளம்பி ஆகாயத்தை எட்டிக் குதித்தன. நளன் நின்று எல்லா வேலைகளையும் பார்த்து வந்தான். கூட்டம் கூட்டமாக நின்ற வானரர்களிடமிருந்து வானரத் தலைவர்கள் வேலை வாங்கினார்கள். மலை போன்ற கற்களையும் மகா விருக்ஷங்களையும் போட்டு மேலே கட்டைகளும் புல்லும் பரப்பிச் சமன்படுத்தினார்கள். அணை வேலையின் சப்தம் சமுத்திர ஓசையைச் சிறியதாக்கி விட்டது.

அணை கட்டி முடிந்தது. ஆகாயத்தில் ஸ்வாதி நட்சத்திர வீதியைப் போல் கடலின் மத்தியில் இந்தப் புதுச் சேதுவானது, பிரகாசித்தது. மேலே தேவ கணங்களும் பூமியில் வானரர்களும் வெற்றி கோஷம் செய்தார்கள். "சத்துருவை ஜெயித்து பல்லாண்டு பல்லாண்டு வாழ்வாயாக!" என்று ராமனை தேவர்களும் ரிஷிகளும் மங்கள ஆசீர்வாதம் செய்தார்கள்.

ஆஞ்சநேயன் ராமனைத் தன் தோள் மேல் தூக்கிச் சென்றான். அப்படியே அங்கதன் லக்ஷ்மணனை எடுத்துச் சென்றான். வானரப் படை கடலைக் கடந்துவிட்டது.

(தொடரும்)

# சவாலே சமாளி!

**பரிசு - 25,000 மைணக்கள்!**

ஆபீஸுக்குக் கிளம்புகிற அவசரம். ஓடி வருகிறீர்கள், ரயில்வே ஸ்டேஷனுக்கு. புறப்பட்டு விட்ட ரயிலில் தாவி ஏறி விடுகிறீர்கள். உங்கள் துரதிர்ஷ்டம் (அல்லது அதிர்ஷ்டம்) அது லேடீஸ் கம்பார்ட்மெண்ட். வண்டி, வேகம் பிடித்து விட்டது. இனி இறங்கவும் வழியில்லை. அடுத்த ஸ்டேஷன் வரும் வரை அங்கேதான்! உங்களைப் பார்த்துப் பெண்கள் முறைக்க, முணுமுணுக்க ஆரம்பிக்கிறார்கள். அசடு வழியாமல் அந்த இக்கட்டைச் சமாளித்தாக வேண்டும். உங்கள் சமாளிப்பில் புத்திசாலித்தனம் தெரிய வேண்டும்.

(இந்தப் போட்டிக்காக, அம்மணிகளும் ஆண்களாக மாறலாம்.)

எங்கே, எடுங்கள் பேனாவை!

இருபத்தைந்து வார்த்தைகளுக்குள் உங்கள் சமாளிப்புச் சாமர்த்தியத்தை பக்கத்திலுள்ள கூப்பனில் அரங்கேற்றுங்கள் பார்க்கலாம். சிறந்த சமாளிப்புக்குப் பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி. உறை மீது : "சவாலே சமாளி" எனக் குறிப்பிடவும். கடைசி நாள் 25.6.94.

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

..............................

**We accept Fixed Deposits at the rate of 24% with incentives.**

**இன்னுமா வாடகை வீடு?**
**நீங்களும் சொந்த வீடு வாங்கலாம்.**
**காசி பில்டர்ஸ் நிறுவனம் வழங்கும் பரிசு மழை!**

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் 5-வது ஆண்டில் வெற்றிகரமான 13-வது குலுக்கல் 26.06.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்துச் சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகைப் போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**சுபமங்களா திட்டம் :**

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :**

சென்னை கே. கே. நகர், மேற்கு விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

இன்னும் ஒரு சில தினங்களில் விலை ஏற்றம் அறிவிக்கப்பட இருப்பதால் உடன் பதிவு செய்து பயனடையுங்கள்.

**FIXED DEPOSITS :**

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப் நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

**காசி ஹவுசிங் - டெவலப்மென்ட் லிமிடெட்**

மற்றும்

**காசி பில்டர்ஸ்**

*காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,*
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.
FAX : 044-4821897



• கூட்டத்தின் ஒரு பகுதி...

# அனல் பறந்த ஆரூர் வாசகர் வட்டம்!

'திருவாரூரை ஒரு சுற்றுலாத் தலமாக்க முயற்சிகள் எடுக்கலாமே?' என்றுத் திருவாரூர் எம்.எல்.ஏ. தம்பு சாமியிடம் கேட்டிருந்தோம்...

• சோலை சுந்தர பெருமாள்

'அந்தக் கனவு நனவாகிவிடுகிறது என வைத்துக் கொள்ளுங்கள். 'வாருங்கள் திருவாருக்கு' என முடியும் நான்கு வரி விளம்பர வாசகத்தை நீங்கள் எழுத வேண்டும்... என்ன எழுதுவீர்கள்...?'

திருவாரூர் வாசகர்களுக்கு இப்போட்டி வைக்கப்பட்டபோது, ஆர். நாகராஜன் இவ்வாறு எழுதினார் :

***அமைதி, ஆன்மிகம்***
***நீதி, இசை...***
***எது வேண்டும் உங்களுக்கு..?***
***வாருங்கள் எங்கள் ஆரூருக்கு...!***

இந்த வாசகத்துக்கு பரிசும் பெற்றுக் கொண்டார் நாகராஜன்.

ஆனால் அமைதியும், ஆன்மிகமும் தழைக்கும் ஆரூரில் அனலும் பறக்க முடியும் என்று நிரூபித்தது 5.6.94 அன்று அங்கு நடந்த கல்கி வாசகர்கள் சந்திப்பு.

என்ன வேகம்! என்ன உத்வேகம் திருவாரூர் இளைஞர்களுக்கு... அவ்வளவு வேகத்தையும் கல்கி இதழை விமர்சிக்கும் போது வெளிப்படுத்தினார்கள்.

திருவாரூர் சிறப்பிதழில் பல முக்கியமான செய்திகள் விடுபட்டுப் போய்விட்டன என்ற ஆதங்கத்துடன் அவற்றைப் பட்டிய லிட்டார்கள்: பஸ் நிலையப் பிரச்னை; அழகிரி காலனி மழைக் காலத்தில் மிதக்கும் நிலையில் இருப்பது; தக்ஷிணாமூர்த்தி மடம், லயன்ஸ் முயற்சியில் புதிதாகத் தொடங்கவுள்ள கண் மருத்துவமனை; ஆரூரான் தோட்டக்கலைக் கழகம்; ஆரூரான் மாணவர் இல்லம், விளையாட்டுக் கழகம்; ஓய்வு பெற்ற தமிழாசிரியர் வரதராசனாரின் தொண்டு, கமலாலயத்தைத் தூய்மைப்படுத்த இழுத்துப் போட்டுக் கொண்டு பணியாற்றிய குழு– என்று பல விஷயங்கள் பட்டியலில் அடக்கம்.

வாசகர்களின் வேகத்தை மட்டுமின்றி திறமையையும் சந்திப்பின் போது காண முடிந்தது.

கவிஞர்கள்/எழுத்தாளர்கள் அதிகம் உள்ள திருவாரூரில் கவிதைப் போட்டி ஒன்று அவசியம் நடத்த வேண்டும் என்று நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த சோலை சுந்தரபெருமாள் கூறி 'எரியும் பிரச்னை' என்று கவிதைக்கான பொருளையும் கொடுத்தார். பத்து வரிகளுக்குள் புது/மரபு கவிதை எழுதலாம் என அறிவிக்கப்பட்டது. கவிதைகளை சென்னையில் ஆசிரியர் குழுவினர் மதிப்பிட்டு அரசியன்பன் எழுதிய கீழ்க் கண்ட கவிதையைப் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுத்துள்ளனர்:

*குத்துவது முள் என்றேன்! கேட்பார் இல்லை!*
*கொஞ்சமும்தான் அமைதியில்லை! குரலைக் கேட்கும்*
*புத்தியுள்ள ஒரு சிலரும் வரவும் இல்லை!*
*புலம்பிடத்தான் முடிகிறதா? அதுவும் இல்லை*
*வெத்துவேட்டுப் பயல்களுக்குக் காலம் என்றால்*
*விவரத்தை தெரிந்ததற்குப் பலன்தான் என்ன?*
*குத்துவெட்டு என்பவன்தான் தலைவன் இன்றா?*
*கொள்கைவழிச் சமுதாயத் தொண்டு நீதா?*



• டாக்டர் மிஸ்கின்



• பரிசு பெற்றவர்கள்

ரூ. 100 பரிசு பெறும் இக்கவிதை தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டுள்ள இரு புதுக் கவிதைகள் அடுத்து வரும் இதழ்களில் பிரசுரமாகும்.

**க**விஞர், எழுத்தாளர் அல்லாதோரும் கலந்து கொள்ளும் வகையிலான எளிமையான போட்டியும் இடம் பெற்றது. 'திரு' எனத் தொடங்கும் சொற்களைத் திருவாரூர் வாசகர்கள் எழுத வேண்டும். (ஊர்ப் பெயர்கள் நீங்கலாக) ஐந்து நிமிடங்களில் மிக அதிகமான (23) 'திரு' சொற்களை எழுதிப் பரிசு பெற்றவர் வீ. பன்னீர்செல்வம்.

**நி**கழ்ச்சி கலகலத்துப் போனது பாட்டுப் போட்டியின் போதுதான்! கர்நாடக இசையின் பிதாமகர்களான மும்மூர்த்திகள் பிறந்த ஊராயிற்றே! அதனால் அவர்களுள் யாரேனும் ஒருவர் இயற்றிய ஒரு கீர்த்தனையின் பல்லவியைப் பாடி, அதற்குப் பொருள் கூற வேண்டும் என்று ஒரு போட்டி வைத்



• பாட்டுப் போட்டி

தோம்.

'கனுகொண்டி நீ..' என்ற கீர்த்தனையைப் பாடிய சாரதா, தியாகராஜரின் சகோதரர் கோபத்தில் ராமர் விக்கிரகத்தைத் தூக்கி எறிந்துவிட்ட போது, அப்பாடலை தியாக பிரும்மம் பாடியதாக விளக்கிச் சொல்லிப் பரிசைப் பெற்றார்.

'ஸ்ரீ மகா கணபதிம்' என்ற தியாராஜ கீர்த்தனையை எஸ்.கே. மூர்த்தியும் 'வாதாபி கணபதி' (தீக்ஷிதர் கிருதி)யை விஜயகுமாரும் பாடினார்கள்!

அனல் தெரித்த விமர்சனங்களுக்கு இணையான பாராட்டுக்களையும் பல வாசகர்கள் வெளிப்படுத்தினார்கள். கல்கியின் நடுநிலையையும், தங்கள் கருத்துக்களையும் சிந்தனைகளையும் உருவாக்குவதில் அது வகிக்கும் முக்கிய பங்கையும் அவர்கள் எடுத்துச் சொன்ன போது அந்த நம்பிக்கையைத் தொடர்ந்து காப்பாற்றிக் கொள்ளும் மிகப் பெரிய பொறுப்பு நமக்கு இருப்பதை உணர்ந்தோம்.

திருவாரூர் வாசகர் சந்திப்புக்கு மயிலாடுதுறை, சிதம்பரம், நன்னிலம், நாகப்பட்டினம், திருத்துறைப்பூண்டி, தஞ்சாவூர் போன்ற சுற்று வட்டாரங்களிலிருந்தும் வாசகர்கள் - குறிப்பாக எழுத்தாள வாசகர்கள் வந்திருந்தார்கள். அவர்களையும் மற்றும் திரளான உள்ளூர் எழுத்தாளர்களையும் பார்த்த போது, படைப்பாளிகளை அள்ளித் தந்துள்ள தமிழகத்தின் இந்த வட்டாரத்தை எண்ணிப் பெருமிதமும் மகிழ்ச்சியும் எழுந்தது.

கூட்டம் முடிந்த பின் நம்மைச் சந்தித்த அரிமா சங்க உறுப்பினர் டாக்டர் மிஸ்கீன், தஞ்சை மற்றும் நாகை வட்டாரத்தில் கண் மருத்துவமனையே இல்லாத நிலையில், நவீன வசதிகளுடைய ஒரு கண் மருத்துவமனையை நிறுவ லயன்ஸ் அமைப்பு எடுத்துக் கொண்ட முயற்சிகளை விளக்கினார் :

"இருபத்தைந்து படுக்கைகள் கொண்ட ஒரு கண் மருத்துவமனை கட்ட சமீபத்தில் அடிக்கல் நாட்டப்பட்டது. இதற்கென சர்வதேச லயன்ஸ் அமைப்பு முப்பது லட்சம் ரூபாயை ஒதுக்கித் தந்தது. எங்கள் முயற்சியில் பத்து லட்சம் ரூபாய் திரட்டியுள்ளோம். கட்டடத்துக்கான நாற்பதாயிரம் சதுர அடி நிலத்தை டாக்டர் கோபாலகிருஷ்ணன் இலவசமாகக் கொடுத்திருக்கிறார். இன்னும் ஓர் ஆண்டில் மமனை செயல்படத் துவங்கி விடும்..." என்றார்.

இந்த வட்டாரத்தில் காடராக்ட் நோய் அதிகமாக இருப்பதற்குக் காரணம் என்ன என்ற ஆய்வை இம் மருத்துவமனை மூலம் மேற்கொள்ளும் திட்டம் இருக்கிறதாம். இது தவிர கண் தானம் குறித்த விழிப்புணர்வையும் லியோ/லயன்ஸ் அமைப்புகள் ஏற்படுத்தி வருகின்றன. கண் தானம் தருவதாக ஒப்புக் கொண்ட ஒரு மூதாட்டி சமீபத்தில் நள்ளிரவில் காலமான போது திருவாரூரில் கண் மருத்துவர்கள் யாரும் இருக்கவில்லை. அவர்களுள் சிலர் அதிகாலை ரயிலில் வரவிருப்பதை அறிந்த லியோ இளைஞர்கள், ரயிலடியிலேயே படுத்திருந்து அவர்களைக் கையோடு அழைத்துச் சென்று கண்களை தானம் பெற அறுவைச் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்...

வாசகர் சந்திப்பின் துவக்கத்தில் தலைமையுரை ஆற்றிய சோலை சுந்தர பெருமாள், "பழைய பெருமைகளை மட்டும் நாம் பேசிக் கொண்டிருந்தால் போதாது... இன்றைய தேவை அறிந்து செயல்பட வேண்டும்" என்று பேசினார்.

திருவாரூர் அவ்வாறு செயல்பட ஆரம்பித்துவிட்டது!

**- சீதா ரவி**

படங்கள் : **பாலாஜி**



"அரசே..! நம் இளவரசர் காதலிக்கிறார் என்று நினைக்கிறேன்...!"

"எதனால் சொல்கிறீர் அமைச்சரே?"

"கண்டனுக்குப் பாக்கிப் பணம் வைத்துள்ளதாக, ஒருவன் இங்கு வந்து ஆராய்ச்சி மணியை அடித்துக் கொண்டிருக்கிறான் அரசே!"

- காட்பாடி விஸ்வநாதன்

• நீங்க நல்லா இருக்கணும்: குறைந்த பட்ஜெட் படமா?



# வியர்வை சிந்தி வரி கட்டுகிறோம்; விரயம் செய்கிறது அரசு!

தமிழ் சினிமா தயாரிப்பாளர்கள் காட்டில் பேய் மழை. ஜெயலலிதாவுக்குக் கோவில் கட்டி, கும்பாபிஷேகம் பண்ணவும் தயாராய், உற்சாக மிதப்பில் இருக்கிறார்கள். பின்னே, அறுபத்தைந்து படங்களுக்குத் தலா மூன்று லட்ச ரூபாய் மானியம் என்றால் சும்மாவா?

குறைந்த செலவில் தயாரிக்கப்பட்ட தரமான தமிழ்ப் படங்கள் அறுபத்தைந்துக்கு ரூ. மூன்று லட்சம் மானியம் என்று அரசு அறிக்கை சொல்கிறது.

குறைந்த செலவு, தரமான- என்ற இரு முக்கிய அம்சங்களைக் கவனியுங்கள். அரசு, மானியம் பெறுவதற்குத் தகுதியானதாக அறிவித்துள்ள அறுபத்தைந்து படங்களுள் ஒரு சிலவற்றைத் தவிர, மேற்படி இரு இலக்கணங்களுக்குப் பொருந்துவதாக ஒரு படமும் அமையாது.

இவற்றில் எழுபத்தைந்து சதவீதப் படங்கள் வெளிவந்த ஜோரில் பெட்டிக்குள் முடங்கியவை. 'தரம்' என்ற சொல்லுக்குப் பக்கத்தில் கூட வராத, நாலாந்தர ரசனை வெளிப்பாடுகள்.

மேலும், அரசு சொல்லும் 'குறைந்த செலவு' என்பது எத்தனை லட்சம் வரை குறிக்கும் என்பது பற்றி விவரம் ஏதும் தரப்படவில்லை. தமிழக அரசே தயாரித்து வெளியிட்ட 'நீங்க நல்லா இருக்கணும்' படத்துக்காக வெளிநாடுகளுக்கெல்லாம் சென்று காட்சிகள் எடுக்கப்பட்டிருப்பது ஊரறிந்த விஷயம்.

குறைந்த பட்ஜெட் என்பது சுமார் 30-40 லட்சங்களுக்குள் என்று- ஒரு பேச்சுக்கு- வைத்துக் கொண்டால், மேற்படி படம் ஒருக்காலும் இந்த வரையறைக்குள் அடங்காது என்பதற்கு எந்தக் கோவிலிலும் கூடம் ஏற்றி சத்தியம் செய்ய நாம் தயார்!

தவிரவும், பட்டியலில் தரப்பட்டுள்ள சில படங்கள், தயாரிப்பில் இருக்கும்போதே அதிக பொருட்செலவில் பிரும்மாண்டமாய் தயாராவதாக விளம்பரம் செய்யப்பட்டதை நினைவு கூர்ந்தால், இத் திட்டத்தின் அபத்தத் தன்மை புரியும்.

கடன் கொடுப்பதற்கே தரம், தகுதி, அவசியம் ஆகியவற்றைக் கவனத்தில் கொண்டு வங்கிகளும் நிதி நிறுவனங்களும் ஆயிரத் தெட்டுக் கேள்விகள் கேட்கின்றன. ஆனால் மானியம் என்ற பெயரில் இங்கே ஒரு கோடியே தொண்ணூற்றைந்து லட்சம் சும்மா அள்ளி வீசப்பட்டுள்ளது. அதுவும் தகுதியற்ற, மிகச் சிறந்தது என்று சொல்ல முடியாத படங்களுக்கு.

திரைப்படத் துறையின் மீது முதல்வரின் அக்கறை என்பதை விட, அவரது வழக்கமான 'பப்ளிஸிடி ஸ்டன்ட்' என்றே இதையும் கருத வேண்டியிருக்கிறது.

நியாயமான தேவைகளுக்கு அரசு மானியம் கிடைப்பதை நாம் தடை சொல்லவில்லை. ஆனால் இப்படி 75 படங்கள் வரை மானியம் கொடுப்பது என்று தீர்மானித்துக் கொண்டு, கடனே என்று தேடித் தேடி 65 படங்களுக்குக் கொடுப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

வரி செலுத்தும் ஒவ்வொரு தமிழரும் - திரைத் துறையைச் சேர்ந்தவர்கள் உள்பட - முதல்வரைக் கேட்க வேண்டிய கேள்வி இது.

- ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.



குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு;
படிச்சவன் சூதும் வாதமும் பண்ணினால்
போவான், போவான், ஐயோவென்று போவான்.
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு
வேதபுரத்திலே வியாபாரம் பெருகுது;
தொழில் பெருகுது; தொழிலாளி வாழ்வான்;
சாத்திரம் பெருகுது; சூத்திரந் தெரியுது;
யந்திரம் பெருகுது; தந்திரம் வளருது;
மந்திரமெல்லாம் வளருது;
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு

- "புதிய கோணங்கி"
மகாகவி பாரதியார்

# இந்திரா பார்த்தசாரதி

எழுதும்

# வேதபுரத்து வியாபாரிகள்

புதிய தொடர்கதை

**கல்கி ஜூலை 3ம் இதழில் ஆரம்பம்!**




**கல்கி**

பொன்விழா நாவல்
போட்டியில் ரூ. 10,000 பரிசு
பெற்ற சரித்திரத் தொடர்கதை

# மணிக்கொடி

எழுதியவர் : ஜோதிர்லதா கிரிஜா

**ஜூலை 10ம் இதழில் ஆரம்பம்!**

# காலமெல்லாம் உழைத்துக் களைத்த நீங்கள் கவலையில்லாமல் இருக்க வேண்டாமா?

இதோ ஓர் அருமையான திட்டம்: **RPS** பென்ஷனர் பெனிஃபிட் டெபாசிட் திட்டம். நீங்கள் ஒரே தொகையாக ரூ. **12,000/-** முதலீடு செய்தால் போதும். (அல்லது அதன் மடங்குகளிலும் செலுத்தலாம்.) ஆண்டுக்கு **20%** என்கிற விகிதத்தில் மாத வட்டி பெறலாம். குறைந்தபட்ச டெபாசிட் காலம் ஒரு ஆண்டு. டெபாசிட் காலம் முழுவதற்குமான வட்டித் தொகை பின் தேதியிட்ட காசோலைகளாக முன்னதாகவே அளிக்கப்பட்டு விடுகின்றன. வேலையிலிருந்து ஓய்வு பெற்றால் என்ன? மாதா மாதம் வருமானம் பெற முடியுமே! **RPS** பென்ஷனர் டெபாசிட் திட்டம் — கவலையில்லாமல் இருக்க ஒரு நிச்சயமான வழி.



எக்சிக்யூடிவ் பிரசிடெண்ட்: **P.G.** சரண்யன்,
முன்னாள் தலைவர்,
கரூர் வைஸ்யா பாங்க் லிட்.



# RPS
## BENEFIT FUND LTD.
(Declared as 'Nidhi' by the Central Government)




தலைமை அலுவலகம்: 16, இராமநாதன் தெரு,
தி. நகர், சென்னை-17. போன்: 441554, 441346.
கிளைகள்: இராயபுரம்
(சென்னை) — போன்: 556164.
கோயம்புத்தூர் — போன்: 43576.
பாண்டிச்சேரி — போன்: 31859.
பெங்களூர் — போன்: 366433.

உறுப்பினர்களுக்கு மட்டும்

**பாதுகாப்பான வழியில் விரைவான வளர்ச்சி**

AKSHAR RPS/94122

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ''சொட்டு நீலத்துடன்'' வழங்கப்படும் இலவசப் பரிசுகள் என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன் தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு ''துளிகளே'' போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

உபயோகிப்பவர்களுக்கு






**JYOTHY LABORATORIES**

Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.
Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா